[illegible]ம் 2 [illegible] கார்த்திகை [illegible] 10



ஸ்ரீ:

# வேதாந்த தீபிகை

என்னும்

## ஸ்ரீ அஹோபில மட சிஷ்ய சபை பத்ரிகை.




ஸ்ரீ அஹோபில மட சிஷ்ய சபையின் காரியதரிசியால்,
ப்ரதி மாஸம் ப்ரசுரம் செய்யப்படும்.



கலாரத்நாகரம் அச்சாபீஸ், சென்னை.

[illegible]ம் 1-க்கு கட்டணம் ரு. 2-0-0.] [ஒரு ஸஞ்சிகையின் விலை அணா [illegible]

# THE VEDANTA DIPIKA.

A MONTHLY TAMIL JOURNAL

OF

HINDU RELIGION AND PHILOSOPHY.

PUBLISHED BY THE GENERAL SECRETARY,

THE AHOBILA MUTT SISHYA SABHA.

Vol. 2–No. 10.

*November 1912.*

வேதாந்த தீபிகை

பரீதாபி௵ கார்த்திகை௴

## விஷய ஸூசிகை.

ஸ்ரீ:.

ஸ்ரீமதே லக்ஷ்மீந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:.

# வேதாந்த தீபிகை

என்னும்

ஸ்ரீ அஹோபிலமட ஶிஷ்யஸபை பத்ரிகை.

ஸம்புடம் 2.] பரீதாபி௵ கார்த்திகை௴ [ஸஞ்சிகை 10.

## வேதங்களின் நித்யத்வம்.

உலகத்தில் உபயோகிக்கப்படும் எல்லா வாக்யங்களும் பௌருஷேயமென்றும் அபௌருஷேயமென்று மிருவகைப்படும். அவைகளில் பௌருஷேயமென்பன ஓர் புருஷனால் முதல்முதலில் ப்ரயோகிக்கப்பட்டு அதற்குமுன் இராமல் புதிதாயுண்டானவை. அபௌருஷேயமென்றால இன்னகாலத்தில் இன்ன மனுஷ்யனால் அல்லது தேவதையால் முதலில் உச்சரிக்கப்பட்டதென்று சொல்ல முடியாமல் அனாதியாய் இருந்து கொண்டுவருவதாய்ச் சொல்லப்படும் வாக்யங்கள். ராமாயணம், பாரதம், குமாரஸம்பவம் முதலான க்ரந்தங்கள் பௌருஷேயங்கள். வேதங்கள் அபௌருஷேயங்கள். அபௌருஷேயங்களான வேதங்கள் நித்யங்கள், அதாவது அநாதியாய் உள்ளவை. வேதங்கள் ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம், என நான்குவகைப் பட்டன. ஒவ்வொரு வேதத்திலும் மந்த்ரம், ப்ராஹ்மணம், உபநிஷத் என்கிற பாகங்களும் இருக்கின்றன. ஒவ்வொரு வேதத்திலும் பதங்களுடையவும் வாக்யங்களுடையவும் வரிசையும் ஸ்வரங்களின் க்ரமமும் அநாதிகாலமாய் மாறுதலடையாமலே வந்துகொண்டிருக்கின்றன. வேதங்களை ஒருவரிடமிருந்து மற்றொருவர் அத்யயநம்செய்து பதக்ரமத்தையும் ஸ்வ

ரங்களையும் அவதானம் செய்துவந்ததால் இந்த க்ரமங்கள் மாருமல் அநுவ்ருத்தமாய் வருகின்றன. ஆசார்யமுகமாய் அத்யயநஞ்செய்தே க்ரஹிக்க வேணுமென்றும் புஸ்தகபாடம் கூடாதென்றும் நியமமிருப்பதால் வேதங்கள் உத்ஸந்நங்களாகாமல் வருகின்றன. ஒவ்வொரு வேதத்திற்கும் பல சாகைகளுண்டென்றும், சில சாகைகள் இந்தக் காலத்தில் அத்யயநம் செய்யப்படவில்லையென்றும், அதனுல் லுப்தமாய்ப் போய்விட்டனவென்றும் சொல்லுகிறதுண்டு. ஆனுல் இதைச்சில பெரியோர்கள் ஒப்புக்கொள்ளுகிறதில்லை. அதாவது, ஒவ்வொரு க்ருதயுகத்திலும் எல்லாச் சாகைகளுக்கும் பூர்ணமாய் அத்யேதாக்கள் உண்டென்று சாஸ்த்ரங்கள் சொல்வதால் ப்ரசுரமாய் அத்யயநமில்லாத சாகைகளுக்கும் சில மஹர்ஷிகள் அத்யேதாக்களாய் மறைந்திருந்துகொண்டு க்ருதயுகாரம்பத்தில் அந்த சாகைகளை ப்ரசுரம்செய்கிருர்களென்று கொள்ளவேணும். ஆகையால் ஒவ்வொரு இடங்களில் ஒவ்வொரு சாகைகள் லுப்தங்கள்போல் தோன்றினுலும் வாஸ்தவத்தில் வேதத்தின் ஒருபாகத்துக்கும் அத்யந்த லோபமில்லையென்பது ஸித்தாந்தம். ஆகவே வேதம் நித்யமென்றும் அபௌருஷேயமென்றும் நம் சாஸ்த்ரங்கள் சொல்லுகின்றன.

இங்கே சிலர் ஆக்ஷேபிப்பது என்னவென்ருல், "இந்த வேத நித்யத்வமெல்லாம் இந்தக்காலத்துக்கு அநுகுணமா? இதை இனி நாம் நம்புவது ஸாத்யமா? ஈச்வரனை நித்யமாய் ஒப்புக்கொள்ளும் நையாயிகர்களும் வேதங்கள் ஈச்வரனுல் செய்யப்பட்டனவென்று சொல்லுகிருர்களே? வேதங்கள் ஈச்வரனுற்கூடச் செய்யப்பட்டனவல்லவென்றும் அவனைப்போல் நித்யங்களென்றும் சொல்லும் வேதாந்திகளும், ஸ்வதஃப்ரமாணமாய் நித்யங்களென்றுசொல்லும் ஈச்வரனையும் ஒப்புக்கொள்ளாத மீமாம்ஸகர்களும் இந்த விஷயத்தில் நமக்கு ஆதரணீயர்களல்ல. இதிஹாஸ புராணங்களைப்போல் வேதங்களும் பல புராதந ப்ராஹ்மணர்களாலும் க்ஷத்ரியர்களாலும் அந்தந்த அவஸரங்களில் இந்த்ரன் அக்நிமுதலான தேவதைகளைக்குறித்துச் செய்யப்பட்ட ஸ்தோத்ரங்கள். பசு, புத்ரன், ஐச்வர்யம், முதலான ஐஹிகப்பிரயோஜநங்களை உத்தேசித்து தாங்கள் தேவதைகளென்று அபிமானித்த சிலவஸ்துக்களைக்குறித்துச் செய்யப்பட்ட சந்தோரூபமான வாக்யங்களை மந்த்

ரங்களென்று சொல்லப்படுகின்றன. இவைகளின் அர்த்தங்களையும் இவைகளின் விநியோகங்களையும் விவரிப்பவை ப்ராஹ்மணங்களென்பவைகள். இவை மந்த்ரபாகத்துக்குப்பின் உண்டானவை. இவைகளுக்குப்பிறகு பல அநுமானங்களினால் இந்த்ராதி தேவதைகளுக்கும் ப்ரதானமாய் ஒரு தேவதை இருக்கவேண்டுமென்று நினைத்து அதன் விஷயமாய் பலபேர்கள் பல சிந்தைகள் செய்து வாக்யங்கள் ரசனை செய்தார்கள். இவைகள் தான் உபநிஷத்துக்கள். ஆகையால் பின்ன பின்ன காலங்களில் பலகர்த்தாக்களால் செயயப்பட்ட பாகங்களையுள்ள க்ரந்தம் வேதமாகையால் அதை அபௌருஷேமென்றும் நித்யமென்றும்சொல்வது ச்ரத்தாக்ருதமான அறிவின்மையே ஒழிய யுக்தமல்ல.

"மேலும் வேதங்கள் கல்பிதங்களென்பதற்குப்பலஹேதுக்கள் சொல்லலாம். (1) காடகம், காலாபகம், பைப்பலாதம் என்று வேத பாகங்களுக்கு ஏற்பட்டிருக்கும் பெயர்களே கடர், கலாபர், பிப்பலாதர் முதலானவர்கள் அவைகளுக்குக் கர்த்தாக்கள் என்பதைத் தெரிவிக்கின்றன. 'விஶ்வாமித்ரஸ்ய ஸூக்தம் ப⁴வதி' என்றும், "நமோ ருஷிப்⁴யோ மந்த்ரக்ருத்³ப்⁴ய:" என்றும் இருக்கும்வாக்யங்களும் வேதங்கள் பலர்களால் செய்யப்பட்ட க்ரந்தங்களென்றே காட்டுகின்றன. (2) வேதங்களில் பலபூர்வகதைகள் சொல்லப்படுகின்றன. 'ப³ப³ர: ப்ராவாஹணிரகாமயத' என்றும் 'உஶந்ஹ வை வாஜஶ்ரவஸ: ஸர்வவேதஸம் த³தௌ³' என்றும் 'ஜாநஶ்ருதிர்ஹ பௌத்ராயண: ஶ்ரத்³தா⁴தே³யோ ப³ஹுதா³ய ஆஸ' என்றும் வாக்யங்களிருக்கின்றன. இவைகள் அந்தக்கதையில் சொல்லப்படும் புருஷர்கள் காலத்துக்குப்பிறகு ஏற்பட்டவைகளென்றே சொல்லவேணும்.

"த்வமாவித² ஸுஶ்ரவஸம் தவோதிபி⁴:
தவ த்ராமபி⁴ரிந்த்³ர தூர்வயாணம் ।
த்வமஸ்மை குத்ஸமதிதி²க்³வமாயும்
மஹே ராஜ்ஞே யூநே அரந்த⁴நாய:॥" (ருக்.1.35.10.)

'ஓ இந்த்ரனே, நீர் உம் உதவிகளால் ஸுஶ்ரவஸ்ஸையும், தூர்வயாணனையும் காப்பாற்றினீர்; குத்ஸன், அதிதிக்வன், ஆயு, என்

கிறவர்களையும் இந்தப்பெரிய ராஜபுத்ரன் முன்னிலையில் அவம திக்கிர்,’ என்பது முதலான பல வேதவாக்யங்களில் நித்யர்களல்லாத இந்த்ராதிகளின் சரித்ரங்கள் கூறப்பட்டுள்ளதால் வேதங்கள் அநித்யங்களென்றே சொல்லவேணும். (3) ‘ தமேதஷாஹ்ரு ஷா ’ ‘ தஸ்ஸத்யோஷிணா ’ முதலான வேதவசநங்களால் பல ப்ராஹ்மண வாக்யங்கள் மந்த்ரங்களின் வ்யாக்யாந ரூபங்களாகவும், அதனால் பிந்தியுண்டானவைகளாயும் வ்யக்தமாய் காணப்படுகின்றன. ‘ உதாஹ ’ என்கிற பதங்களை உபயோகித்தும் பல இடங்களில் மந்த்ரங்கள் ப்ராஹ்மணங்களில் விவரிக்கப்படுகின்றன. இதுவும் அநித்யத்வத்துக்கே உபபாதகமாகிறது, (4) “ நசைதத்விதா ப்ராஹ்மணா ஸ்மோவா ப்ராஹ்மணாவா ” என்றும் “ கோ ஹி தத்வேத யத்யமுஷ்மிந் லோகேஸ்தி வா ந வா ” என்றும் இருக்கிற வாக்யங்கள் இதரவாக்யங்களில் ப்ரஸித்தமான ப்ராஹ்மணத்வத்தையும் பரலோகத்தையும் நிஷேதிக்கின்றன. இதனால் வேதங்கள் பரஸ்பர விரோதங்களைக் காட்டுவதால் அவிஶ்வஸநீயங்கள். (5) ‘ யஜ்ஞாநம் ப்ரஸ்நாம் ’ என்றும் ‘ ஸ்ருணிஸ்ருணிம் ’ என்றும் ‘ ஆபோவா ஓஷதயாஸநம் ’ என்றும் நிஷ்ப்ரயோஜநமாயும் நிரர்த்தகமாயும் பலவாக்யங்களிருக்கின்றன. நித்யமாய் ஆப்தமான வாக்யங்களில் இவைகள் இருப்பது அஸம்பாவிதம். (6) இப்படியே, ‘ வநஸ்பதயஸ் ஸத்ரமாஸத ’ என்றும் ‘ நப்ரஹ்மவ்ருஷ்டி ஸ்ருத்வா ராஜகர்மேஷு நக்தம் ’ என்றும் ‘ ஶ்ருணோத க்ராவாணஃ ’ என்றும் அஸம்பாவிதார்த்தங்களைச் சொல்லியும் நிஷேதித்தும் பலவாக்யங்க ளிருக்கின்றன. (7) மேலும், யாவருக்கும் இதுவரையிலும் அர்த்தமாகாத பலவாக்யங்க ளிருக்கின்றன; “ ஸ்ருண்யேவ ஜர்ப்ஹரீ துர்ப்ஹரீது ” என்றும் “ உம்ப்ரமேஷாம் ஸ்ருகா நாகா ” என்றும் இதுபோன்ற மற்ற வாக்யங்களும் ஒரு அர்த்தமும் இல்லாதவைகளாய் தோன்றுகின்றன. இவைகளையெல்லாம் பார்க்குமிடத்தில வேதங்களை நித்யங்களென்றும் அபௌருஷேயங்க ளென்றும் சொல்வது அஸங்கதமான கார்யம்” என்கிறார்கள்.

இந்த ஆக்ஷேபங்களை எல்லாம் நம்பூர்வகளே எடுத்து கூறி அவைகளை நிரஸநம் செய்திருப்பதால் அந்த நிரஸந களைப் பூர்வமீமாம்ஸை, உத்தரமீமாம்ஸை முதலான க்ரந்தங்க லும் வ்யாக்யாநங்களிலும் பார்த்தறிந்து சக்தர்கள் ஸந்தேஹ தெளியவேணும். அவைகளை விஸ்தரித்து உபபாதநம செய் இங்கு அவகாசமில்லை யாகையால் ஸங்க்ரஹமாய் நித்யத்வ அபௌருஷேயத்வம இவைகளின் ஸாம்ப்ரதாயிக அர்த்தங்களை யும் மேற்சொன்ன தூஷணங்களுக்குப் பரிஹாரங்களையும் ஸூசி பிக்கிறோம்.

பூர்வ மீமாம்ஸையில், சப்தத்துக்கும் அர்த்தத்துக்கும் அநா தியாய் ஸம்பந்தம் ஏற்பட்டிருக்கிறதென்றும், அது ஸ்வாபாவி கமென்றும, புருஷக்ருத மல்லவென்றும் நிச்சயிக்கப்பட் டிருக்கிறது இன்னவஸ்துவுக்கு இன்ன பெயரென்பது ஆதுநிகர்களால் பெரி யோர்களின் வ்யவஹாரத்தினால் அறியப்பட்டாலும், அந்தப் பெரி யோர்கள் தங்கள் பூர்வர்களிடத்தில அறிந்தார்கள் என்கிற க்ரமத் தால் ஈச்வர ஸங்கேதமு மல்லாமல் அநாதியாய் சப்தார்த்த ஸம் பந்தம் ஏற்பட்டுள்ள தென்பது மீமாம்ஸகர்கள் கொள்கை. மேலும் சப்தமே நித்யமென்பதும் அவர்கள் ஸித்தாந்தம். அதாவது அகார ககாராதி வர்ணங்கள் நித்யங்கள். நாம் உச்சரிக்கும்போது அவைகள் வ்யக்தமாகி உடனே நசிப்பதுபோல் தோன்றினாலும் அப் படித் தோன்றுவதெல்லாம் வர்ணவ்யக்திகளே ஒழிய வர்ணஜாதி கள் எப்போதும் நித்யமாயிருக்கின்றனவென்று மீமாம்ஸகர்கள் சொல்லுகிறார்கள். வையாகரணர்களோ 'கௌஃ' என்றும் 'ஸோமஃ' என்றும், 'காத்யாயநீ' என்றும் இதுபோன்ற பலவிதமான சப் தங்களை க்ரமமாய் உச்சரிக்கும்போது, முதலில் உச்சரிக்கப்படும் வர்ணங்கள் கடைசி வர்ணோச்சாரண காலத்தில் நஷ்டமாய் விடு வதால் எல்லா வர்ணங்களாலும் ஒரு அர்த்தம் மனஸ்ஸில் ஸ்புரி க்கவேண்டியதற்காக நசிக்கும் வர்ணங்கள் 'ஸ்போடம்' என்னும் ஒரு சக்தியைவைத்துப் போகின்றனவென்றும் அதனால்தான் அர் த்தம் ஸ்புரிக்கிறதென்றும் ஸ்போடந்தான் சப்தம் என்றும் வர்ணங்கள் அநித்யங்களென்றும் சொல்லுகிறார்கள். மற்ற ந்யா யம், வேதாந்தம் முதலான தர்சநங்களில் ஸ்போடவாதத்தை ஒப் புக்கொள்ளுகிறதில்லை, நம் விசிஷ்டாத்வைதத்திலும் சப்தம் அநி

த்யமென்றே ஸாதிக்கப்படுகிறது. ஆகிலும் வேதப்ராமாண்யத்துக்குக் குறைவில்லையென்றும் உபபாதிக்கப் படுகிறது.

இப்படி சப்தத்தை நித்யமாய் ஒப்புக்கொண்டு அதனால் வேதம் ப்ரமாணமென்றும் மீமாம்ஸகர்கள் சொல்லுகிறார்கள். இதனால் எல்லா சப்தங்களும் ப்ரமாணமாகுமோ? இல்லை. வேதங்களும் அவைகளை யநுஸரித்த சப்தங்களுமே ப்ரமாணம். ஏனென்றால் வேதங்களின் கர்த்தா இன்னாரென்று ஒருவராலும் சொல்லப்படவில்லை. மனுஸ்ம்ருதி முதலான க்ரந்தங்களின் கர்த்தாக்களை ஸ்மரித்திருப்பதுபோல் உலகத்தார் வேதகர்த்தாவை ஸ்மரிக்கவில்லை. இதனால் வேதம் அபௌருஷேயம் என்றும் நித்யமென்றும் சொல்லப்படுகிறது. அபௌருஷேயமென்று சொன்னதினால வேதத்திற்கு தோஷங்களில்லையென்று சொன்னதாயிற்று. புருஷக்ருதமான க்ரந்தங்களில் ப்ரமத்தினாலும், பிறர்களை மோசஞ்செய்ய வேணுமென்கிற எண்ணத்தினாலும் பல அபார்த்தங்கள் இருப்பதை நாம் பார்க்கிறோம். புருஷ கர்த்ருகம் அல்லவென்று சொல்வதால் அப்படிப் பட்ட தோஷங்கள் வேதத்தில் உண்டாகக் காரணமே யில்லையென்று மீமாம்ஸகர்களும் வேதாந்திகளும் சொல்லுகிறார்கள். ஆப்தரான ஈச்வரனால் கல்பிதங்கள் என்று சொல்வதைப் பார்க்கிலும் வேதங்கள் ஈச்வரனைப்போல் நித்யங்களென்று சொல்வதே உசிதமென்று வேதாந்திகள் சொல்லுகிறார்கள். மீமாம்ஸகர்களோ ஈச்வரனையும் ஒப்புக்கொள்ளாதவர்களாய் நித்யமான வேதங்கள் ஸ்வதஃ ப்ரமாணங்களாகையால் ஈச்வரனில்லாவிட்டாலும் வேதப்ராமாண்யத்துக்குக் குறைவில்லையென்று ஸமர்த்திக்கிறார்கள்.

வேதம் நித்யமானால் முன்சொன்ன ஆக்ஷேபங்களுக்குச் சமாதானமென்ன? என்றால், முக்யமான ஆக்ஷேபம் 'அநித்யஸம்யோகம்'; அதாவது அநித்யர்களான இந்த்ரன், முதலானவர்களை அவலம்பித்த வாக்யங்களும், கடர், கலாபர், விச்வாமித்ரர் முதலானவர்களால் செய்யப்பட்டதாய் தோன்றுவதுமே நித்யத்வத்துக்கு முகயமான ஆக்ஷேபம். இதற்குச் சமாதானம் பூர்வ மீமாம்ஸை முதலத்யாயம் முதல் இரண்டு பாதங்களிலும், ப்ரஹ்ம ஸூத்ரம் முதலத்யாயம் மூன்றாம் பாதத்தில் (27-28-29-வது) 3-ஸூத்ரங்களிலும் விசேஷித்துச் சொல்லப்படுகிறது. இந்த விஷ

யத்தில் நம் ஸித்தாந்தத்துக்கு அநுகுணமான ஸமாதானத்தை இங்கே விவரிக்கிறோம்.

இந்த்ரன்முதலான தேவதைகளும் கடர், கலாபர், வஸிஷ்டர், விச்வாமித்ரர் முதலான ரிஷிகளும் நம் ஸித்தாந்தத்தில் அதிகாரி புருஷர்களாய் எண்ணப்படுகிறார்கள். ப்ரதிகல்பம் வேறு அதிகாரி புருஷர்களுண்டானாலும் இந்த்ரன் முதலான பெயர்கள் அநுவருத்தமாய் வருகின்றன.

'ஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்' என்றும்
'யதர்துஷ்வ்ருதுலிங்காநி நாநாரூபாணி பர்யயே ।
த்ருஶ்யந்தே தாநி தாந்யேவ ததா ப்ரஜாஸர்கேஷு வர்த்ததே ।'

என்றும் சொல்லுகிறபடி ஒவ்வொரு கல்பத்திலும் ப்ரஹ்மா இந்த்ரன் முதலான அதிகாரி புருஷர்களை ஸ்ருஷ்டிக்கிறார். இந்த ப்ரவாஹம் அநாதியாய் நடந்துவருவதால் இவர்களெல்லாம் ப்ரவாஹ நித்யர்களென்று சொல்லப்படுகிறார்கள். ஆனால் வேதத்தில் ஒருகாலத்தில் இருந்த இந்த்ர வ்யக்தியைக் குறித்துச் சில குணங்கள் சொல்லப்பட்டால் அது மற்ற இந்த்ர வ்யக்திகளுக்கும் ஸமானமாகுமோ வென்றால், இதற்கும் முன் உதாஹரித்த வாக்யமே ஸமாதானமாக வேண்டியிருக்கிறது. அதாவது ப்ரதி ஸ்ருஷ்டியிலும் அதிகாரி புருஷர்கள் ஸமான பல வீர்ய சேஷ்டிதங்களுள்ளவர்களாய்ச் சொல்லப்படுகிறார்கள். மேலும் ப்ரதி கல்பாரம்பத்திலும் ப்ரஹ்மா சில அதிகாரி புருஷர்களான ரிஷிகளை ஸ்ருஷ்டித்து அவர்களுக்கு அத்யயநமில்லாமல் வேதங்களை வர்ணங்களின் வரிசையும் ஸ்வரங்களும் பேதிக்காமல் அறியச் சக்தியை கொடுக்கிறார். அப்படிப்பட்ட ருஷிகளால் ப்ரவசனம் பண்ணப்படுவதால் அந்தந்த சாகைகளுக்கு ப்ரவக்தாக்களான கடர் கலாபர் முதலான ரிஷிகளின் பெயரால் அந்தந்த சாகைகள் வழங்கி வருகின்றன. இந்தக் காரணத்தால் தான் அவர்களுக்கு 'ருஷ்ய:' என்கிற பெயரும் உண்டாகிறது என்று ஸித்தாந்தம். ஆனால் மஹாப்ரளயத்தில் நம் ஸித்தாந்தப்படி ப்ரஹ்மாவும் நசித்துப்போய் பகவான் ஒருவர்தவிர மற்ற ப்ரக்ருதி விகாரங்களெல்லாம் அவரிடத்தில் லயிப்பதால் பிறகு ஸ்ருஷ்டியின் ஆரம்பத்திலாவது வேதங்கள் முதல் முதல் உத்பன்னங்களாய் சொல்லப்பட வேண்டு

மே என்றால், இதுவும் சரியல்ல. ஏனென்றால், ‘यो ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै’ என்று சொல்லுகிறபடி, ஆதிபுருஷன் கல்பங்களின் தொடக்கத்தில் ப்ரதி ப்ரஹ்மாவுக்கும் தான் ஸர்வக்ஞனைகயாலே ஸ்வயமாய் பூர்வாநுபூர்வியை அனுஸரித்தே வேதங்களை உபதேசிக்கிறார். ஆகையால் இந்த ஆநுபூர்வியும் ஸ்வரங்களும் தொடர்ந்து வருவதாலும் ப்ரதமோச்சாரணம் இன்னகாலத்தில் இன்னரால் செய்பப்பட்டதென்று சொல்ல முடியாததாலும் தான் வேதங்களை நித்யமென்றும் அபௌருஷேயமென்றும் நாம் சொல்லுகிறோம். இப்படி வேதங்கள் நித்யமென்பதை ‘अनादिनिधना नित्या वागुत्सृष्टा स्वयम्भुवा। आदौ वेदमयी दिव्या यतः सर्वाः प्रवृत्तयः’ என்று மநுவும் சொன்னார். வேதங்களுக்குக் கர்த்தா இருக்கும் பக்ஷத்தில் க்ருதக்ஞர்களான மஹர்ஷிகள் அவர்களில்லையென்று நிஷேதிப்பதாகச் சொல்வது ஸாஹஸமாகுமென்று ஸ்ரீ நிகமாந்த தேசிகன் ஸேஶ்வர மீமாம்ஸையில் அருளிச்செய்கிறார். இந்த அநித்ய ஸம்யோகத்தினால் உண்டாகும் ஆக்ஷேபத்தை ‘उक्तं तु शब्दपूर्वत्वम्’ என்பது முதலான ஸூத்ரங்களால் பகவான் ஜைமினி ஸமாதாநம் செய்தார். அதாவது ப்ரவாஹாநாதியாய் உச்சாரணம் செய்யும் ஒவ்வொருவரும் முன் உச்சாரணம் செய்தவனை அநுஸரித்துச் செய்வதினால் வேதங்கள் நித்யம். அல்லது எல்லாத்துக்கும் காரணமான பகவானும் வேதசப்தங்களையே ஸ்மரித்து ஜகத்ஸ்ருஷ்டி முதலான கார்யங்களைச் செய்வதால், அந்த வேதங்கள் அநாதியென்று ஏற்படுகிறது. இதை மநுஸ்ம்ருதியும்,

सर्वेषां तु स नामानि कर्माणि च पृथक् पृथक्।
वेदशब्देभ्य एवादौ पृथक् संस्थाश्च निर्ममे॥

என்று சொல்லுகிறது. அதாவது ஈஶ்வரன் லோக ஸ்ருஷ்டி செய்யும்போது வேதத்தில் உள்ள சப்தங்களையும் அவைகளின் அர்த்தத்தையும் ஸ்மரித்து அதற் கநுகுணமாய் வஸ்துக்களை ஸ்ருஷ்டித்து பெயர்களையும் கொடுக்கிறார், என்று சொல்லப்பட்டது.

இன்னும் மற்ற ஆக்ஷேபங்களுக்கும் மந்த்ரா திகரணத்திலும் அர்த்தவாதா திகரணத்திலும் ஸமாதாநம் சொல்லப்பட் டிருக்கிறது.

மேலும் பொதுவாய் வேதம் ஸமக்ரமாய் ப்ரமாணமென்று லும் ஓவ்வொரு வேதபாகத்திற்கு ஓவ்வொரு விஷயத்தில் முக்ய தாத்பர்யமென்றும் சொல்லப் படுகின்றது. அதாவது விதிபாகத்துக்குப் பூர்ணமாய் தன் அர்த்தத்தில் தாத்பர்யமென்றும், மந்த்ரங்களுக்கு த்ரவ்ய தேவதாதி அர்த்தப்ரகாசநத்தில் தாத்பர்யமென்றும், அர்த்தவாதங்களுக்கு ஸ்தோத்ரங்கள்செய்து விதிகளை ப்ரரோசனம் செய்வது கார்யமென்றும் சொல்லப்படுகிறது. இதனால் கார்யபரமான விதிவாக்யங்களே வேதத்தில் முக்யபாகமென்றும் மற்ற பாகங்களுக்குத் தன் அர்த்தங்களில் தாத்பர்யமில்லையென்றும், விதிசேஷமாய் அதாவது விதிகளின் அநுஷ்டாநத்துக்கு உபகாரகங்களாய் மந்த்ரங்களும் அர்த்தவாதங்களும் ப்ரயோகிக்கப் படுகின்றனவென்றும் மீமாம்ஸகர்கள்கொள்கை. வேதாந்திகளோ கார்ய பரமில்லாத 'ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம' முதலான வாக்யங்களுக்கும் ப்ராமாண்யத்தை ஒப்புக்கொண்டு ப்ரத்யக்ஷத்துக்காவது யுக்திகளுக்காவது விரோதமில்லாத பக்ஷத்தில் அர்த்தவாதங்களும் உபநிஷத்பாகங்களும் ஸ்வார்த்தத்தில் தாத்பர்யமுள்ளவையென்றும் அதனால் உபநிஷத்துக்களில் சொல்லப் படும் ப்ரஹ்ம குணங்களும் மோக்ஷ ஸ்வரூபாதிகளும் ப்ரமாணங்களென்றும் சொல்லுகிறார்கள். நாம் ஸாமாந்யமாய் ஸ்துதியென்றால் ஒருவனுக்கு இல்லாத குணத்தைச் சொல்வது என்று எண்ணுகிறோம். இந்தப் பிரயோகம் ஔபசாரிகம். அதாவது ஸ்துதி சப்தத்துக்கு முக்யமல்ல. ஆகிலும் 'ஹ்ருதாயகவ்ருஹ்ய ஸா ஹி ந ஸ்துதிர் வஸந்த ந:' என்கிற காளிதாஸ வாக்யத்தில் இந்த அர்த்தத்திலேயே ஸ்துதிபதம் ப்ரயோகிக்கப்பட்டுள்ளது. ஆனால் 'யதார்த்தநிஷ்ட குணாக்யாநம் ஸ்துதி:' அதாவது வாஸ்தவமான குணங்களைச் சொல்வதுதான் ஸ்துதிஸ்வபாவம் என்று நம் மாசார்யர்கள் சொல்லுகிறார்கள். இதனால் ஸ்துதியைப் ப்ரயோஜநமாகக் கொண்ட அர்த்தவாதங்களும் ஸ்வார்த்தத்தில் வேறு பாதகமில்லாதபோது பிரமாணங்களென்பது நம் ஸித்தாந்தம் இந்த விஷயத்தில் மீமாம்ஸகர்களுக்கும் நம் ஸித்தாந்தத்துக்கும் உண்டான பேதத்தை ஓர் உதாஹரணத்தால் விவரிக்கலாம். 'வநஸ்பதய: ஸத்ரமாஸத' 'வ்ருக்ஷங்கள் சேர்ந்து யாகங்கள் செய்தன' என்பது ஓர் அர்த்தவாதம். அதன் தாத்

பர்யம், 'அசேதநங்களான வ்ருக்ஷங்களும் சேர்ந்து யாகம் செய்தன; ஆகையால் சேதநர்களான நாமும் செய்யவேண்டும்' என்று யாகத்தை ஸ்துதிசெய்ய அஸம்பாவிதமான அர்த்தத்தை வேதம் சொல்லுகிறது' என்று மீமாம்ஸகர்கள் சொல்லுகிறார்கள். ஸ்ரீநிகமாந்ததேசிகன் ஸேச்வர மீமாம்ஸையில் இந்த வாக்யத்தின் ப்ரயோஜனம் ஸ்துதியாகிலும் ஸ்வார்த்தமும் ப்ரமாண மாகையால், இங்கு 'வநஸ்பதி' பதம் வ்ருக்ஷங்களுக்கு அபிமானிகளான தேவதைகளைச் சொல்லுகின்றதென்றும் ஒரு காலத்தில் வாஸ்தவமாய் வநதேவதைகள் யாகம்செய்ததை ப்ரவாஹா நாதியான வ்ருத்தாந்தமாக்கி ஶ்ருதி சொல்லுகிறதென்றும் அர்த்த மருளிச் செய்கிறார்.

இப்படியே தேவதைகள் வாஸ்தவமாய் உண்டா? அல்லது மந்த்ரங்களும் அதிலுள்ள இந்த்ராதி சப்தங்களுமே தேவதைகளா?, என்கிற விஷயத்தில் ஈச்வரனில்லாவிடிலும் வேதங்கள் ப்ரமாணமானதுபோல், தேவதைகள் இல்லாவிடிலும் யாகாதி கர்மங்கள் தங்களுடைய அபூர்வமென்கிற சிரஸ்தாயியான சக்தியால் ஸ்வர்க்காதி பலங்களை கொடுக்கின்றனவென்றும், தேவதைகளையும் அவர்களுக்கு விக்ரஹாதி பஞ்சகத்தையும் ஒப்புக்கொள்ளவேண்டாமென்றும் நிரீச்வர மீமாம்ஸகர்களின் ஸித்தாந்தம். விக்ரஹாதி பஞ்சகமாவது, சரீரம், ஹவிஸ்ஸைப் பெற்றுக்கொள்ளுதல், அதை புஜித்தல், அதால் த்ருப்தி, அதினால் யஜமாநனிடத்தில் ப்ரீதியுண்டாகி யாகபலனை யளித்தல் ஆகிய ஐந்து. இந்த சரீராதிகள் தேவதைகள் விஷயத்தில் இல்லையென்றும் கர்மங்களே அபூர்வத்வாரா பலப்ரதமென்றும் மீமாம்ஸகர்கள் கொள்கை. இது மீமாம்ஸையின் வாஸ்தவமான தாத்பர்யமல்லவென்றும் ஜைமினியாகிய ஸூத்ரக்காரருக்கும் உபவர்ஷர் முதலான ப்ராசீன வ்ருத்திகாரர்களுக்கும் தேவதைகளை நிஷேதிப்பதில் தாத்பர்ய மில்லையென்றும், தேவதைகளில்லாவிட்டாலும் கர்மங்கள் அநுஷ்டேயங்களென்று "கர்மாநுஷ்டாநாவஸ்தம்பநம்" அல்லது யாகாதி கர்மங்களில் ச்ரத்தையை வளர்க்க இந்தப்படி மீமாம்ஸையில் சொல்லப்பட்டதென்றும் நம்ஸம்பிரதாயத்தில் பல ஆசார்யர்கள் நிச்சயித்திருக்கிறார்கள். இந்த தேவதைகளுக்கு ப்ரஹ்ம வித்யையை அப்யஸிப்பதிலும் உபாஸநங்கள் செய்வதிலும் அதிகாரமுண்

டென்று ப்ரஹ்ம ஸூத்ரம் 3-வது பாதத்தில் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அங்கும், “ஶப்த இதி சேந்நாத: ப்ரபவாத் ப்ரத்யக்ஷாநுமாநாப்யாம்” (I. 3. 27) என்னும் ஸூத்ரத்தில், தேவதைகளுக்குச் சரீராதிகளிருந்தால் நச்வரமான அந்த பதார்த்தங்களைச்சொல்லும் வேதத்துக்கு அநித்ய ஸம்யோகமென்னும் முன் சொன்ன ஆக்ஷேபம் வருமே யென்று ஆக்ஷேபித்து, வராதென்று ஸமாதானம் செய்யப்பட்டிருக்கிறது. ஏனென்றால், ‘அத: ப்ரபவாத்’, இந்த்ராதி சப்தங்கள் ஒரு வ்யக்தியைக் குறிக்காமல் ஒரொருஜாதி விசேஷத்தை ‘கோ’ முதலான சப்தங்களைப்போல் குறிக்கின்றன. ப்ரதி ‘கோ’ வ்யக்தி நசித்துப்போனாலும் ஜாதி ஸ்திரமாயிருப்பதுபோல் இந்திரத்வம் ஸ்திரமாயிருப்பதாலும் ஒவ்வொரு இந்த்ராதி வ்யக்தியையும் ப்ரஹ்மா வேத சப்தங்களிலிருந்து அறிந்த குணசேஷ்டிதங்களுடன் ஸ்ருஷ்டிப்பதால் இந்த தோஷமுண்டாகாதென்றும் ஸமாதானம் செய்யப்பட்டிருக்கிறது. இதற்கு ப்ரத்யக்ஷமென்கிற ஶ்ருதியும் அநுமாநமென்கிற ஸ்ம்ருதியும் ப்ரமாணமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. ‘அத ஏவ ச நித்யத்வம்’ என்கிற அடுத்த ஸூத்ரத்தினால் ப்ரவாஹ நித்யதையை அங்கீகரிப்பதால் வேதங்களுக்கு நித்யத்வம் ஸித்தமாகிற தென்று சொல்லப்படுகிறது. ‘மந்த்ரக்ருதோ வ்ருணீதே’ என்றும் ‘விஶ்வாமித்ரஸ்ய ஸூக்தம் பவதி’ என்றும் இதுபோன்ற வசநங்கள் அந்தந்த மந்தரங்களுக்கு முதல் முதலான கர்த்தாக்களைச் சொல்வனவல்ல; அந்தந்த மந்த்ரங்களை ஈச்வரனால் சக்திகொடுக்கப்பட்ட சிலர் முன் அந்த மந்தரங்கள் அத்யயநம் பண்ணப்பட்டுவந்த க்ரமத்துடனே தபோபலத்தால் கண்டுபிடித்தார்களென்றும், அப்படி மந்த்ரங்களை கண்டுபிடித்தவர்கள் அதிகாரி புருஷர்களாகையால் ப்ரதிகல்பம், ப்ரதி மந்வந்தரம், ப்ரதி சதுர்யுகம் அப்படிப்பட்டவர்கள் உண்டாகிறார்களென்றும், இந்தக் காரணங்களால் இவர்களைச்சொல்லும் வேதங்கள் நித்யங்களே யென்றும் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

‘ஸமாந நாமரூபத்வாச்சாவ்ருத்தாவப்யவிரோதோ தர்ஶநாத் ஸ்ம்ருதேஶ்ச’ என்னும் அதற்கு அடுத்த (I. 3. 29) ஸூத்ரத்

தில், ப்ரஹ்மாமுதல் எல்லாரும் நசிக்கும் ப்ராக்ருத ப்ரளயத்தில் வேதங்கள் அத்யேதாக்களில்லாத்தால் நஷ்டமாக வேணுமே யென்கிற ஆக்ஷேபத்துக்கு ஸமாதானம் சொல்லப்படுகிறது. ஆதி கர்த்தாவாகிய ஈப்வரன் ப்ரளயாந்தத்தில் ஸ்ருஷ்டிக்கு ஆரம் பிக்கும்போது ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்து அவருக்குப் பூர்ணமாய் வேதத்தை யுபதேசித்து அதில் கண்டபடி ஸகல ஜகத்தை யும் ஸ்ருஷ்டிக்கும்படி ப்ரஹ்மாவுக்கும் நியமித்து தாமும் அப் படியே செய்கிறார். ஆகையால் வேதத்தின் நித்யத்வத்துக்குக் குறைவில்லையென்று சொல்லப்பட்டிருக்கிறது.

இதனால் வேதம் நித்யமென்பதற்கு '[illegible]' அதாவது வர்ணங்களுடையவும் சப்தங்களுடையவும் ஆநுபூர்வி இப் போதைக்கு இருப்பதுபோல் எப்போதும் இருந்ததென்றும் ப்ர ளயகாலத்தில் ஈப்வரஜ்ஞானத்தில் அந்தர்ப்பவித்து நஷ்டமாகாத வேதம் ஸ்ருஷ்டிகாலத்தில் ப்ரஹ்மாவுக்கு உபதேசிக்கப்பட்டு வருகிறதென்றும், ப்ராயேண எல்லாரும் குருமுகமாய் அத்யயநம் செய்து வேதத்தை ரக்ஷித்துவந்தாலும் சில விசேஷ புண்யசாலிக ளான புருஷர்கள் அத்யநமில்லாமல் தாங்களே ஈப்வரனால் கொ டுக்கப்பட்ட சக்தியால் சிலசில பாகங்களை கண்டுபிடித்து வந் தார்களென்றும், சிலர் விசேஷமாய் ஒவ்வொரு சாகையை ப்ரவசனம் செய்ததால் அவர்கள் பெயரால் அந்தந்த சாகைகள் ப்ரஸித்திபெற்றனவென்றும் நம்முடைய ஸித்தாந்தம். இப்படிக் கொள்ளாதபோது நம்முடைய ஸ்ம்ருதிகளும் புராணங்களும் விரோதிக்குமென்றும் இப்படிக்கொள்வதில் ஒரு யுக்திக்கும் பாத கம் இல்லையென்றும், இருந்தாலும் ஸ்ம்ருதி புராண ப்ராமாண்யத் தில் ருசியுள்ளவர்களுக்கு வேறுகதியில்லையென்றும் நம்மாசார்யர் கள் நிர்த்தாரணம் செய்திருக்கிறார்கள்.

ஆனால் ப்ரத்யக்ஷத்துக்கும் யுக்திக்கும் விருத்தமான ச்ரு தியின் அர்த்தங்கள் ப்ரமாணமாகுமா என்று கேட்கலாம். ப்ரத் யக்ஷத்துக்கு விரோதமான ச்ருதிகள் ப்ரமாண மில்லைதான். அப் படி ச்ருதிகளிருந்தால் அவைகளுக்கு ப்ரத்யக்ஷத்துக்கு விருத் தமில்லாத தாத்பர்யங்களைக் கல்பித்து கௌணவ்ருத்தியாலாவது

லக்ஷணா வ்ருத்தியாலாவது அர்த்தம் செய்வது சாஸ்த்ர ஸம்மதம். மேலும் அப்ரத்யக்ஷமாயும் யுக்தியால் நிச்சயிக்க முடியாததாயுமுள்ள பாரலௌகிகமான விஷயங்களிலும் ஜீவேச்வர ஸ்வபாவங்களிலும் குணங்களிலுமே ச்ருதிக்கு முக்யப்ரவ்ருத்தியானதால் அந்த விஷயங்களில் ச்ருதி ப்ரமாண மென்கிறவர்களுக்கு ப்ரத்யக்ஷமாவது அனுமானமாவது விரோதமாக வேண்டியதில்லை. இந்த ந்யாயத்தை அநுஸரித்தே ஸ்ரீ பாஷ்யத்தில் சாஸ்த்ரயோநித்வா திகரணத்தில், அநுமானத்தால் யசோவத்தாய் ஈச்வரனை ஸாதிக்க முடியாதென்று பஹுக்ரந்தத்தால் நிர்ணயிக்கப்படுகிறது. அதீந்த்ரியமான விஷயத்தில் சப்தம் என்கிற வேதமே ப்ரமாணம் என்றும் அதை அந்த விஷயங்களில் ப்ரதிகூல தர்க்கங்களால் பாதிக்கக் கூடாதென்றும் பலவிடங்களில் சொல்லியிருக்கிறது.

"ആർഷം ധർമ്മോപദേശം ച വേദശാസ്ത്രാവിരോധിനാ
യസ്തർക്കേണാനുസന്ധത്തേ സ ധർമ്മം വേദ നേതരഃ"

என்கிற மநுவசநமும், தர்க்கமென்கிற மீமாம்ஸாசாஸ்த்ரத்தையநுஸரித்து வேதங்களுக்கும் ஸ்ம்ருதிகளுக்கும் அர்த்தஞ் செய்ய வேண்டு மென்று சொல்லுகிறது. ஸ்ரீ நிகமாந்த தேசிகனும்,

'ശാസ്ത്രൈകവേദ്യേ വിഷയേ വിഹതിർവിരുദ്ധേ ന തർക്കക്ഷു
ഷാണാഃ'

என்பதால், அதீந்த்ரியமான விஷயங்களில் சாஸ்த்ர ப்ராமாண்யத்தை ஒப்புக்கொள்ள வேணுமென்று அருளிச் செய்கிறார். ஆகையால் நம் சாஸ்த்ரங்களில் வேதங்களின் நித்யதையும் ப்ராமாண்யதையும் உபபாதிக்கப் பட்டாலும் வேதங்கள் எந்த அர்த்தத்தில் நித்யங்க ளென்றும் வேதத்தின் ஒவ்வொரு பாகங்களும் எங்கெந்த அம்சங்களில் ப்ரமாணங்களென்றும் அறிய வேண்டியது அவச்யம்.

இந்த விஷயத்தில் நம்மாசார்யர்கள் என்ன அபிப்ராயப் பட்டிருக்கிறார் களென்பதை அவர்கள் க்ரந்தங்களை அநுஸரி

த்து மேல் விவரித்தோமே யொழிய நாம் ஸ்வாபிப்ராயமாய் யா தொன்றும் இங்கே சொல்லவில்லை. வஸ்து தத்வங்களிலாவது பூகோள ககோள ஸந்நிவேச விஷயங்களிலாவது ச்ருதிபுராணங் களுக்கும் ப்ரத்யக்ஷா நுபவங்களுக்கும் விரோதம் ஏற்பட்டால் அந்த விஷயங்களில் வேதத்தின் தாத்பர்யத்துக்கு விரோதமாய் நிர்த்தாரணம் செய்தாலும் ச்ருதிப்ராமாண்ய வாதத்துக்கு பாதகம் வராதென்று சொல்ல இடமுண்டு. புராணாதிகளில் சொல்லும் லோகநிர்மாண ரீதிகளும் ராஜவம் சாநுசரிதங்களும் பரஸ்பர விருத்தங்கள் என்றும் ஆதுநிக பரீக்ஷையில் அதத்யங் களாகக் காணப் படுகின்றனவென்றும் பஹுவாய் எண்ணப்படுகின் றன. இது வாஸ்தவமாயிருந்தாலும் இந்த விஷயங்களில் ச்ரு திக்கு தாத்பர்ய மில்லையென்றும் அதீந்த்ரிய விஷயங்களில் மாத் ரம் ச்ருதிக்கு தாத்பர்ய மென்று மெண்ணுவது ஸம்ப்ரதாயத் துக்கு விரோத மாகாது. இந்த விரோதங்கள் இக்காலத்தில் பஹுவாய் எற்பட்டு பலவைதிக விஸ்வாஸிகளை ப்ரமிக்கப் பண் ணுவதால் இப்படிப்பட்ட விஷயங்களில் எதுவரையில் ச்ருதி விரோதம் ஸஹ்யமென்று ஶாஸ்த்ரஜ்ஞர்கள் விசாரிக்க வேண்டும்.

டி. ராஜகோபாலாசாரியர்.

---

ஸ்ரீ:.

## வேதாந்த தீபிகை ஆபீஸில் கிடைக்கும் புஸ்தகங்கள்.

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| 1. | ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹம்—(ஸ்ரீ. இஞ்சிமேடு- ரங்கநாதா சார்யருடைய தமிழ் வ்யாக்யானத்துடன்) ... ... | 0 | 2 | 0 |
| 2. | ஸ்ரீ த்ராவிடவேத தாத்பர்யம்—(ஸ்ரீ. எஸ். கோபால ஸ்வாமி ஐயங்காரால் எழுதப்பட்டுள்ளது) ... ... | 0 | 2 | 0 |
| 3. | ஸ்ரீ அஹோபிலமடமும், அதன் ஶிஷ்யர்களின் கர்த்தவ் யங்களும்:—(ஸ்ரீ. டி. ராஜகோபாலாசார்யரால் செய்யப் பட்ட உபந்யாஸம்) ... ... ... ... ... | 0 | 2 | 0 |

வேண்டுமெவர்கள் சென்னை, மயிலாப்பூர், கேசவப்பெருமாள் ஸந்நிதி வீதியில் இருக்கும் ஸ்ரீ வேதாந்த தீபிகை மானேஜருக்கு எழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

ஸ்ரீ:.

# ஸ்ரீ சதுஶ்ஶ்லோகீ விவரணம்.

(தொடர்ச்சி.)

—ooo—

ஈஷத்த்வத்கருணாநிரீக்ஷணஸுதாஸந்துக்ஷணாத்ரக்ஷ்யதே
நஷ்டம் ப்ராக்ததலாபதஸ்த்ரிபுவநம் ஸம்ப்ரத்யநந்தோதயம் ।
ச்ரேயோ நஹ்யரவிந்தலோசநமந:காந்தாப்ரஸாதாத்ருதே
ஸம்ஸ்ருத்யக்ஷரவைஷ்ணவாத்வஸு ந்ருணாம் ஸம்பாவ்யதே
கர்ஹிசித் ॥ ௩ ॥

முன் இரண்டு ஶ்லோகங்களினால் லக்ஷ்மியின் பரத்வத்தையும் ஸௌலப்யத்தையும் சொல்லி இந்த ஶ்லோகத்தில் எல்லா புருஷார்த்தங்களுக்கும் அவள் அநுக்ரஹமே ஹேதுவென்றருளிச்செய்கிறார். அன்றிக்கே, பரத்வமும் ஸௌலப்யமுமிருக்க நம்மிஷ்டப் பிராப்திக்கு அவளிடம் அவகாசமுண்டோ என்கிறசங்கையைப் பரிஹரிக்கிறார்.

த்ரிபுவநம் - மூன்றுலகங்களும், அதாவது, மூன்றுலகங்களிலுள்ள சேதநர்களும். பூலோகம், புவர்லோகம், ஸுவர்லோகம் ஆகிய மூன்றுலோகங்கள். இது ப்ரக்ருதி மண்டலத்திலுள்ள எல்லா லோகங்களுக்கு முபலக்ஷணம்: எல்லா உலகங்களிலுமுள்ள ஸம்ஸாரி சேதநர்களென்றபடி. ஈஷத் - கொஞ்சம். உன் அநுக்ரஹத்தின் ஒருலேசமுமென்றபடி. த்வத் கருணா நிரீக்ஷண ஸுதா ஸந்துக்ஷணாத்-உன் க்ருபாவலோகநமாகிய அம்ருதத்தால் உஜ்ஜீவிக்கப்பட்டு. ரக்ஷ்யதே - காப்பாற்றப்படுகிறது. 'வ்ருஷ்டிம் ஜீவம் ப்ரதிஸஞ்ஜஹர்ஷ' என்னுமாப்போலே, (வாடினபயிர்கள் மழையால் கிளம்பி விளங்குமாப்போலே) எல்லோரும் உன்கருணையின் ஓர்துளிபட்ட மாத்திரத்

இல் உயிர்பிழைத்து எழுந்து ஹ்ருஷ்டர்களாகிறார்கள், என்றபடி. ஓர் துளியே பிழைப்பதற்குப்போரும். கருணைவர்ஷத்தில் நனைபவர்களின் ஆநந்தம் சொல்லத்திறமில்லை. ‘अपाङ्गा भूयांसो यदुपरि परं ब्रह्म तदभूत्, अमी यत्र द्वित्रास्स च शतमखादिस्तदुदयः’ என்றார் பட்டர். அதாவது இரண்டு, மூன்று கடாக்ஷபாதங்களே இந்த்ரன் முதலான பதவிகளுக்குக் காரணங்கள். மேற்பட்ட கடைக்கண்பார்வைகளோ பரப்ரஹ்மத்துக்கேதகும். ‘यस्यां यस्यां दिशि विहरते देवि दृष्टिस्त्वदीया तस्यां तस्यामहमहमिकां तन्वते संपदोघाः’ உன்பார்வை எந்த திக்கில் விழுமோவென்று தாங்களும் போய்ச் சேர ஸம்பத்துகள் அவளை ப்ரதீக்ஷங்களாயின வென்றார் கவிதார்க்கிகஸிம்ஹன். कारुणानिरीक्षणं - கருணைகூர்ந்த பார்வை, கருணையாலுண்டாகும் பார்வை யென்றதாயிற்று. ஸர்வாநிஷ்டத்தையும் போக்கி அபீஷ்டத்தைக் கொடுப்பது உன் க்ருபையின் ஸ்வபாவம் அன்றோ? அந்தக்கருணையா லுண்டாகும் பார்வை, என்றபடி. உன்கருணை அம்ருதரூபமன்றோ? பகவானே காருண்யத்துடன் நிக்ரஹபுத்தியை மறந்தாரில்லை. நீ ‘नित्याज्ञातनिग्रहा’ யன்றோ? ‘प्रणिपातप्रसन्ना हि मैथिली जनकात्मजा’ ‘क्षिप्रप्रसादिनीं देवीं’ ‘सदाऽनुग्रहसंपन्ना’ ‘अनुग्रहपरादृशीं’ என்பவை முதலான வசநங்கள் இங்கே அநுஸந்தேயங்கள். அன்றிக்கே, कारुणानिरीक्षणं - கருணைக்கு விஷயமாக்குதல், ஸ்வதஸ்ஸர்வவ்யாபியான கருணை यादृच्छिक ஸுக்ருதத்தால் யார் பக்கல் சேருகிறதோ அவர் கருணாநிரீக்ஷிதராகிறார். அம்ருதம்போல் உயிரிழந்தவரைப் பிழைப்பித்தலால் ‘सुधा’ என்று கருணாநிரீக்ஷணத்தைச் சொன்னது. மோஹித்தவர்களையும் அஸ்திமாத்ரர்களையும் சக்தி விசேஷத்தால் பிழைப்பித்தல் அம்ருதத்தின் குணம். இங்கே மோஹித்தவரும் உயிரிழந்தவரும் யாரென்றால், प्राक् - முன், அதாவது, நீ உபேக்ஷையுட னிருந்தபோது, அதாவது, உன்

கருணை எட்டாதபோது. தத³பா⁴வே - அந்த நிரீக்ஷணம் கிடைக்காமல். அப்போதும் உனக்குக்கோபம் என்னலாகாது. நீ கோபமே அறியாதவ ளென்றோ. கோபத்துக்கு ஹேது இருக்கச்செய்தேயும், 'நகஶ்சிந்நாபராத்⁴யதி' என்றும் 'க்ஷமா க்ஷமாவதாமிவ' என்றுமல்லவோ உன் பாசுரங்கள். நஷ்டம்-உயிரிழந்தது. 'த்ரைலோக்யம்' என்றதோடன்வயம். ஸம்வ்ருத்தி - உன் நிரீக்ஷணமுண்டானவுடன். ஶுஷ்கமரம் - பட்டமரம் கப்பும் கிளையுமாய்க் கிளம்பினுப்போல் ஸர்வதோமுகமான ஸம்பத்துடன் கூடினதாயிற்று. ஸ்ருஷ்டிக்கும் ஸ்திதிக்கும் உன்கருணையே காரணம். ஸம்ஹாரத்துக்கு உன் உபேக்ஷையே ஹேதுவென்றதாயிற்று.

'அவித³விஶிஷ்டாநு ப்ராணிநாம் ஜந்தூநாமுபகாராய ஜாத நிவேதா। க்ஷணகலைபர யோகம் விதரஸி வ்ருஷகிரீஶ நாதா கரணாக்ஷம்'

என்றது, 'அவிகல்ப க்ருபாஹ்வயநாம' என்று சொல்லக் கூடிய உனக்கும் துல்யம், என்கிறாள். 'ப்ராஜாபத்யப்ரஶ்ருதி விப⁴வம் ப்ரேக்ஷ்ய பர்யாயது³:க²ம்' என்றபடி ப்ரஹ்மேந்த்ராதிகளுக்கும் துக்கங்கள் நேர்ந்தால் அவைகளின் நிவர்த்தநம் உன் அதீனமாயிற்று.

முன்னொருகால் துர்வாஸஸ் சாபத்தால் த்ரைலோக்ய ராஜ்யத்தை இழந்த இந்த்ரனும் மற்றை ச்வயர்களான தேவதைகளும் பகவான் அநுக்ரஹத்தால் அம்ருதமதநம் செய்தார்கள். அந்த அவஸரத்தில் உத்பந்நையான லக்ஷ்மி மஹர்ஷிகளாலும் தேவதைகளாலும் ஸ்துதிக்கப் பட்டவளாய், "பஶ்யதாம் ஸர்வதேவாநாம் யயௌ வக்ஷஸ்தலம் ஹரே:" என்கிறபடி பகவானை அடைந்தாள். அந்தலக்ஷ்மியால் பார்க்கப்பட்ட தேவதைகள் அம்ருதபாநஞ் செய்து ஜயமடைந்தார்கள். இந்த்ரன் தன் பூர்வைச்வர்யத்தை யடைந்து லக்ஷ்மியை ஸ்தோத்ரஞ் செய்யுங்கால், இங்கு சொல்லி யிருக்கும் அர்த்தத்தை சொல்லுகிறான்,

த்வயா தேவி பரித்யக்தம் ஸகலம் புவநத்ரயம் |
விநஷ்டப்ராய மபவத் த்வயேதாநீம் ஸமேதிதம் ||

அதாவது, உன்னால் விடப்பட்ட மூன்று லோகங்களும் நசித்தன போலாகி, இப்போது உன்னால் அநுக்ரஹிக்கப் பட்டு வ்ருத்தியை யடைந்திருக்கின்றன, என்கிறான்.

இப்படி லக்ஷ்மியின் கடாக்ஷத்தால் உதயமென்றும் அவள் உபேக்ஷையால் விபத்து என்றும் சொல்வதை ப்ரளயாநந்தர ஸ்ருஷ்டி காலங்களுக்கும், விசேஷித்து சேதநர்கள் உதயாப்யுதய காலங்களுக்குமாக இரண்டு விதமாகவும் அர்த்தஞ் செய்யலாம். இதற்கு, முன்சொன்ன இந்த்ர வ்ருத்தாந்த மன்னியில், "ப்ரஹ்மாத்யா: ஸகலா தேவா: மநுஷ்யா: தவோபாயநா: | ஸயதே ஜ த்வத்வீக்ஷாஶ்ரிதா: க்ஷமேஷ்வபி ||" என்றும் 'யஸ்ய ஸ்ரீ: ஸம்பூர்ணா: ப்ராணம் ஸ்ருஷ்டிரூப ரூபநா தாரதஸ்ய ப்ராதோத:' என்றும் இருக்கிற வசநங்களும் ப்ரமாணம்.

இப்படி லக்ஷ்மீகடாக்ஷத்தால் பொதுவாய் அப்யுதய முண்டாகு மென்று சொல்லி, பகவத் பக்தர்களுக்குப் பார்த்தநீய மான புருஷார்த்தங்களும் லக்ஷ்மியின் அதீநமென்கிறார். ஸம விஜ்ஞேஶ்வர உரு: காங்க்ஷா ப்ரஸாதாத்ருதே - புண்டரீகாக்ஷனான ஸ்ரீமந் நாராயணனுக்கு அபிமதையான பத்நீயாகிய உன் க்ருபையைத் தவிர்த்து, கதாசிச் - ஒரு பொழுதும், ந்ருணாம் - மநுஷ்யர்களுக்கு, ஸம்ஸ்த்ரக்ஷரவேஷ்வண வாவ்வஸ - ஐச்வர்யம், ஆத்மப்ராப்தி, பரமபதம் ஆகியமூன்று மார்க்கங்களிலும் ஶ்ரேயோ ந ஹி ஸம்ஸாத்யதே - வேறு ச்ரேயஸ் ஸாதநம் இருக்க ந்யாயமில்லை. இங்கே 'ந்ருணா' மென்றது ப்ரஹ்மாதி தேவர்களுக்கு முபலக்ஷணம்.

யத்யோநிஶிதம் ப்ராப்ய ஸந்தோஷம் தத: க்ருதாஸ |
நித்யம்வாஷ்டமணேஶ்வயம் தத்வ ஸாக்ஷாத் ஸ்வயம்வாந் ||

என்று பாத்ம புராணத்தில் சொல்லுகிறபடி எல்லா ஸம்ஸாரி சேதநர்களுக்கும் லக்ஷ்மியின் அநுக்ரஹம் அவரவர் விரும்பும் இஷ்டங்களையடைய த்வாரமாகிறது, என்று கருத்து.

மேலும், 'கூரவிஂஷூமௌாவக' என்றதால்,

ஜாயஶாகஂ ஹி வஈரஈஷஂ யஂ வமெஶ்ஹகு ஶய-ஂஸஏஷக꞉ ।
ஸாகுவிகுஸ தஈ விஜெஞூய꞉ ஸ மெவ மொகூாயடுவிஜகு꞉ ॥

என்று எவருடைய பார்வைக்கு ப்ரபாவம் சொல்லப் பட்டிருக்கிறதோ அவருடைய பத்நீ, என்ற தாயிற்று. 'உகூகாஜா' என்றதால் இருவரும் பரஸ்பராநு கூலர்களாய் வர்த்திக்கும் ஸ்வ பாவம் சொல்லப்பட்டது. இதை 'யஸ்ா வீக்ஷ்ா உவஂ தஹிஂஹி தவரரயீமொா வியமெத்ஸவிஂ, ஶீமெயஂ வஂஈ கநாக்யாஸ்ா ரவஸூா ஸ்ாமெஹ்கரஸ்ாத்யா' என்று ஆழ்வான் அருளிச்செய் தார். 'ஸஂஸ்ரூத்ஹுக்ஷர மெவஷ்ணவாயவஸ' என்றது 'மௌஶ்ரஸ்ா க்ஷர யாயாத்ு ஹூவகூஶரணாகூடிநாஂ' என்றதுடன் ஸமா நார்த்தம். 'அக்ஷரஂ' என்றால் ப்ரக்ருதிவியுக்த ஆத்மஸ்வரூபம், அதாவது பரிசுத்தாத்ம ஸ்வரூபம். பகவத்கீதையில் 'கிஂதஹ் ஹு' என்னும் ப்ரச்நத்துக்கு ப்ரதிவசநமாகிய 'அக்ஷரஂப்ஹவரஶஂ' என்னுமிடத்தில், 'அக்ஷரஂ - ப்ரக்ருதிவிநிஶுக்காத்தஸ்ரு வஂ' என்று கீதாபாஷ்யம். இதை மறுபடியும் 'யஶக்ஷரஂ வெஷ விமொ விஶஂதி' (8, 11) என்றும், வரஶாஂஹதிஂ (8, 13) என்றும் சொல்லி, 'அவ்மொக்தாக்ஷரஇத்ு்க்த꞉ தமாஹு꞉வரமாஂஹதிஂ । யஂ வ்ராவ்ு க நிவதநெத தலாஶ வரஶஂ ஶஶ (8, 21) என்று முடிக்கையாலும், மேல், 'வஈரஈஷ꞉ஸவர꞉வாயு' (8, 22) என்று பகவானை வேறாய்ச் சொல்வதாலும், அக்ஷர சப்தம் - ப்ர க்ருதி வியுக்தமாய் யயாவஸ்திதமாய், அதாவது ப்ரஹ்மாத்மகமா யுள்ள சுத்தஜீவாத்மாவைச்சொல்லுகிறது. ஐஶ்வர்யார்த்தி, ஜிஜ்ஞாஸு, ஜ்ஞாநி என்கிற விபாகம் இங்கேயும் சொல்லப்பட்டது.

இந்த மூன்றுபேர்களும், பகவதுபாஸகர்களென்றும், இவர்களில் ஜிஜ்ஞாஸுவும் ஜ்ஞாநியும் அபுநராவ்ருத்தியுள்ளவர்களென்றும், ஜ்ஞாநீ விளம்பமில்லாமல் ப்ரஹ்மப்ராப்தி யுள்ளவனென்றும், ஜிஜ்ஞாஸு வென்கிற கைவல்யார்த்தி, ஆத்மாநுபவமாகிற கீழ்பட்ட ஆநந்தத்தில் விளம்பித்துப் பிறகு பரமபதத்தை அடைய வேண்டியவனென்றும் நம்மாசார்யர்கள் ஸித்தாந்தம் செய்திருக்கிறார்கள். 'ஜ்ஞாநயாதாத்ம்யவித: ஸம்ஸாரநிஸ்ஸ்ப்ருஹஸ்ய ச ஸத்வநாச் ப்ரஹ்மமயதீதி ப்ரஹ்மப்ராப்தி வசநாச் க்ஷிப்ரமேவ ப்ரஹ்மப்ராப்தி: ஜிஜ்ஞாஸோஸ்து ப்ரஹ்மாத்மகதயா ப்ரஹ்மஶேஷதைகரஸத்வ ந ஸம்ஶயம்' என்று கீதாபாஷ்ய வாக்யம். ஐஶ்வர்யம் போலே கைவல்யமும் முமுக்ஷுவுக்கு ஹேயமென்பது பலவிடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த புருஷார்த்தங்களைச் சேர்த்து, 'ஐஶ்வர்யாக்ஷரயாதிம் பரமம்வா ஸம்வா' என்று பட்டரும் அநுஸந்தித்தார்.

இந்த கைவல்யார்த்தியைத் தவிர நம்ஸித்தாந்தத்தில் வேறொரு கைவல்யார்த்தியும் உண்டு. அவன் முன்சொன்னவனிலும் ஹேயன்தான். அந்த கைவல்யார்த்திக்கு புநராவ்ருத்தி உண்டு. முன்சொன்ன கைவல்யார்த்திக்குப்போல் புநராவ்ருத்தி இல்லாமல் விளம்பித்தாவது ப்ரஹ்மப் ப்ராப்தி இல்லை. இந்த இரண்டுவித கேவலர்களின் ஸ்வபாவத்தை அர்த்தபஞ்சகாதிகாரத்தில் ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகன் தெளிவித்திருக்கிறார். "ப்ராப்திவிரோதியாவது" என்று துடங்கி "ஆத்மப்ரவணரையும் ப்ரக்ருதிஸம்ஸ்ருஷ்டம், ப்ரக்ருதிவியுக்த மென்கிறவிரண்டு படியிலும் ப்ரஹ்மத்ருஷ்டியாலே யாதல், ஸ்வரூபேணவாதத்தாலே யாதல் உபாஸிக்கமூட்டி அவை நாலுவகைக்கும் பலமாக அல்பாஸ்வாதங்களைக்கொடுத்து புநராவ்ருத்தியைப் பண்ணியும், ப்ரஹ்மாத்மக ஸ்வாத்மஜ்ஞாந ப்ரவ்ருத்தரானவர்களையும் ஸ்வாத்மமாத்ரக ஸாக்ஷாத்காரவான்களையும் அந்தராயமான ஆத்மாநுபவத்தாலே யாதல் அஷ்டைஶ்வர்ய ஸித்திகளாலே யாதல், ஸ்வா

ஷிவஜ ப்ராப்தி ப்ருஹகாய நிஷேவணாதிகளாலே யாதல்...போ ங்களில் கால்தாழப்பண்ணி ககந்யபராக்கி ஹமவகப்ராப்திக் விலக்காயிருக்கும்" என்று அங்கேவாக்யம். ப்ருஹாதக ஸ்வதுவிஷநவ்ருவ்ருத்த ரென்றது பகவத்கீதை 7-வது அத்யாயத்தில் சொல்லப்பட்ட ஜிஞ்ஞாஸு வென்பவன்தான். அவனைப்போல பஞ்சாக்நி வித்யா நிஷ்டனும் இந்த அந்தராயமான ஸ்வாத்மாநு பவத்தில் இச்சையுள்ளவன். இவர்களுக்கு ப்ரஹ்ம ப்ராப்திக்கு விளம்பம் எவ்வளவு காலமென்று வரையற முடியாததால் இவர்க ளிச்சை ஹேயமென்னப் படுகிறது. இருவரும் வைஷயிக ஸுகவை த்ருஷ்ணவஹமான ஆத்மாநுபவ ஸுகத்தின் ஆகர்ஷத்தில் அகப்பட்டு பரமபுருஷார்த்தமான பகவதநுபவத்தை பஹுகா லம் இழக்க நேரிடும். பக்தியோகம் காமநாபேதத்தாலே சூத்ராவ ஜோகநஸவ ரூபமான இந்த அக்ஷரபத மென்கிற வ்யவதாநத் துக்கு ஹேதுவாகும். இதை "யெதஸ்பிஷ்டாஸ்யொஹகா: ஹமகாராஹிதெ உதா: । ஸவெடு வூவந யஉராண: ப்ரதிபநஸ்தஸு ஜொக்ஷ ஹாநி" என்று அநுகீதை பிரித்து வெளியிட்டது. சரமஸ்லோகாதிகாரத்திலும் ஜீவமாத்ரோபாஸக னுக்கு அர்ச்சிராதிகதியும் ப்ரஹ்ம ப்ராப்தியும் இல்லையென்றும் பஞ்சாக்நிவித்யா நிஷ்டனுக்கு ஆத்மமாத்ராநுபவம் வந்தாலும் க்ரமேண அர்ச்சிராதிகதியும் ப்ரஹ்மப்ராப்தியும் உண்டென்றும் சொல்லப்பட் டிருக்கிறது.

இந்த கைவல்ய நிஷ்டையை ஆழ்வாரும்
'அற்றது பற்றெனில் உற்றது வீடுயிர்,
செற்றது மன்னுறில் அற்றிறை பற்றே' (I. 2. 5.)

என்கிற பாசுரத்தில் 'வீடு' என்கிற பதத்தால் ஸூசிப்பித்து, ஆத்மமாத்ராநுபவத்தை நிந்தித்து 'மன்' என்று நித்ய புரு ஷார்த்தமான பகவத்ப்ராப்தியை ப்ரலாகித்தார். 'இறுக லிறப் பென்று ஞானிக்கு மப்பயனில்லையேல்' (v. i. 10.) என்றபாட்டி லும் அதன் வ்யாக்யாநங்களிலும் இந்த அர்த்தம் வெளியாகிறது.

ஸ்ரீ ஸ்தோத்ர பாஷ்யத்திலும் ‘ஸோமாபவமூ’ ஸபூ வ்யாக்யாநத்தில் “ஸோம ஜுஹ்வதம் ஸ்வாராஜ்யாதி ஸர்வாந் ஸவ: ஸ்வர்காத்ராநந்தஸ்ய । த்வஸிந்த்ராக்ஷிதத்பூம் கேவிதா ப்ராப்ஸ்யதி । நஹி நித்யம் கிஞ்சித் ஸ்தாநம் ஸ்த்ராநந்தரஸ்யோ ஸ்ம் கைவல்யஸ்தஸி” என்றும் ஆசார்யன் அருளிச் செய்திருக்கிறார். இந்த கைவல்யம் நித்யமாவென்றும், இரண்டு கைவல்யார்த்திகளும் அடைவது ஒரே ஸ்தானமா வெவ்வேறாவென்றும், கைவல்யார்த்திகளின் ஸ்தாநம் ப்ரக்ருதி மண்டலத்திலா அதற்கு வெளிப்புறத்திலா வென்றும், இன்னும் இது சம்பந்தமான பல விஷயங்களில் விஸ்தாரமான விசாரங்கள் ஆசார்யர்களின் க்ரந்தங்களில் இருக்கின்றன. அவைகளை அங்கே பார்த்துத் தெளிய வேணும்.

ஆக விம்மூன்று விதமான புருஷார்த்தங்களுக்கும் லக்ஷ்மியின் நீரிக்ஷண மென்கிற அனுக்ரஹமே காரணமென்றதாயிற்று. இந்த ப்லோகத்தால் லக்ஷ்மிக்கு மோக்ஷஹேதுத்வமும் சொன்னதாயிற்று. இதை “ஆத்மவித்யா ச தேவி த்வம் விமுக்திபலதாயிநீ” என்று இந்த்ரனும் லக்ஷ்மீஸ்தோத்ரத்தில் சொன்னான்.

விஷ்ணுதாஸன்.

ஸ்ரீ:.

# ஸ்ரீபாகவத தனிச்லோகீ.

(தொடர்ச்சி.)



௨௬. யஸ்யாங்க்ரிபங்கஜ ரஜஸ்ஸ்நபநம் மஹாந்தோ வாஞ்சந்த்யுமாபதிரிவாத்ம தமோபஹத்யை । யர்ஹ்யம்புஜாக்ஷ ந லபேய பவத்ப்ரஸாதம் ஜஹ்யாமஸூந் வ்ரதக்ருஶாந் ஶதஜந்மபிஸ்ஸ்யாத் ॥ 10, 52, 45.

ஸ்ரீ ருக்மிணிப்பிராட்டி, "கீழ் ச்லோகத்தில் நான் ப்ரார்த்தித்தபடி எனக்கு க்ருபைசெய்யாவிட்டால் நான் ப்ராணனை விட்டு விடப் போகிறேன்" என்கிறாள். 'ஜீவேயம் ஶதம் யதா நாத:' என்றாளிறே. மஹாந்த: - லோகபாலர்களென்று பெயர்பெற்றவர்களும் அண்டாதிபதிகளும். ஆத்மதமோபஹத்யை - தங்கள் தங்கள் தமோகுணத்தை, அதாவது, அதினாலுண்டான அஜ்ஞானத்தைப் போக்கடித்துக் கொள்ளுவதற்காக. யஸ்யாங்க்ரிபங்கஜ ரஜஸ்ஸ்நபநம் - யாதொரு உம்முடைய திருவடிகளின் தூளிகளால் ஸ்நாநத்தை. உமாபதிரிவ - ருத்ரன்போலே, 'ஶிரஸா தாரயாமாஸ யோऽத்யாபி த்ர்யம்பக:' என்கிறபடி, ருத்ரன் திருவடிகளிலுண்டான கங்கையைச் சிரஸ்ஸினால் வஹித்தார். அதனால், 'யச்சௌச நிஸ்ஸ்ருத ஸரித்ப்ரவரோதகேந தீர்த்தேந மூர்த்த்நி அதிக்ருதேந ஶிவ: ஶிவோऽபூத்' என்கிறபடியே, சிவன் என்று பெயர் பெற்றார். அதுபோல், வாஞ்சந்தி -

விரும்புகிறார்களோ, உம்முடைய திருவடித்தூளிகளை சிரஸ்ஸால் தரிக்க விரும்புகிறார்களோ, என்றதாயிற்று. 'ஶீர்ஷே ச பாதாந ஸம்ஸ்பர்ஶயிஷ்யதி' என்றும், 'நாந்யம் வரம் பவதங்க்ரிமௌலிவிஶேஷணம் நஃ' என்றும், * 'நின் செம்மாபாதபற்புத்தலைசேர்த்து' என்றும் மஹான்கள் ஆசைப்பட்டார்களிறே.

பவத்ப்ரஸாதம் - அப்படிப்பட்ட உம்முடைய அநுக்ரஹத்தை. ந லபேய யதி - நானடையாமல் போவேனாகில். உமக்கு ப்ரணயிநியாயிருந்து உம்முடைய ப்ரணயத்துக்கு நான் விஷயமாயாகாமற் போனேனேயாகிலும், லோகத்தாரோபாதி உம்முடைய அநுக்ரஹத்துக்குப் பாத்ரமாயாகாமற் போனேனேயாகில். ஸரஸாம்புஜாக்ஷ - தாமரைப் புஷ்பங்கள் போன்ற கண்களையுடையவனே. † 'உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்டாமரைக் கண்ணு' என்றும், 'விஶ்வாபிரக்ஷண விஹாரக்ருதக்ஷணேந' என்றும் சொல்லுகிறபடியே ஸம்ஸார தவாநல தக்தரான ஜீவர்களை அம்ருதவர்ஷம் போன்ற கடாக்ஷ லஹரிகளால் எல்லாத் தாபமுந் தீரும்படி கடாக்ஷிப்பதற்காகத் தாமரைக் கண்களைப் பெற்றுயென்று நினைத்திருந்தோம். எம் திறத்தில், ‡ 'உன்தாமரை புரை கண்ணிணையும் செவ்வாய் முறுவலும் ஆகுலங்கள் செய்ய வழிதற்கே நோற்றேமேயாம்'. எல்லாருக்கும் உஜ்ஜீவநமாயிருப்பது என் ஒருத்திக்கு அழிவதற்குக் காரணமாகும்படியானது நான் பண்ணின கர்மபலமோ? என்கிறாள் ¶ 'ஏழையராவியுண்ணுமிணைக்கூற்றங்கொலோ', என்று சொல்லுகிறபடியே ம்ருத்யுவைப் போல் க்ரூரங்களான § 'தாமரைக்கண்கள் கொண்டீர் தியாலோ?' என்னை ஒருத்தியை மாத்ரம் இவைகளைக் கொண்டு ஹிம்ஸிக்க நினைத்தாயோ? என்கிறாள்.

* திருவாய். ii. 9. 1.
† பெரிய - திரு. vii. 1. 9.
‡ திருவாய். vi. 2. 2.
¶ ஷை vii. 7. 1.
§ ஷை x. 3. 1.

இப்படி, 'ஸ்வஸாஹஸாநேந நாயேந' என்கிறபடி உம்முடைய பரத்வத்தையடக்கி உமக்கு ஸ்வரூபமென்னலாம்படியான க்ருபை என் விஷயத்தில் மாறினால், ஜஹ்யாமஸூந் - ப்ராணங்களை விட்டுவிடுவேன்.

* 'உடம்பினாற் குறைவில்லா வுயிர்பிரிந்த மலைத்துண்டம்
கிடந்தனபோல் துணிபலவா வசுரர்குழாம் துணித்துகந்த
தடம்புனல சடைமுடியன் தனியொருகூ றமர்ந்துறையும்
உடம்புடையான் கவராத வுயிரினாற் குறைவிலமே'

என்கிறாள். தங்கள் தங்களை ஈச்வரனாக அபிமானித்திருக்கும் துர்மானிகளுக்கும் ப்ரயோஜநாந்தர பரர்களுக்கும் கொடுக்கக் கடவ உம்முடைய வுடம்பை, அநந்ய ப்ரயோஜனையாய் அதையே ஆசைப்பட்டு அது கிடையாமையாலே முடியப்போகிற எனக்குக் கொடுத்தாலாகாதோ? இப்படி ஸர்வ ஸாதாரணமான பேற்றையும் யான் பெறாவிடில், உயிருடனிருந்து என்ன ப்ரயோஜநம்? 'ஸதி ஜீவே ஸாதநம்' என்பதும் என்னிடத்தில் பொய்யாமத்தனை யாகாதோ? ஆகையாலினி ப்ராணனைச் சுமக்கேன்' என்கிறாள். அத்தலைக் குறுப்பாகாதவை யெல்லாம் வ்ருதா, என்றபடி. 'யாஸ்யத்யதோ நா தேஹம்' என்றானிறே பெருமாளைத் திருவடி; அந்தப்பழிக்கு நாளாகேன், என்கிறாள். 'பாபம் ஹி ந விந்தேத' வீணான ஊர்ப்பழி சுமக்கும்படியான பாவம் என்னிடத்தில் இல்லை. இங்கு பாவமென்றது பெருமாளை விட்டுப்பிரிந்துயிரோடிருக்கக் காரணமாகிய கர்மவிசேஷத்தை. ப்ராணனை விடுவதென்றால் அதற்கோர் காரணம் வேண்டாவோ? நீ நினைத்தவுடனே விடமுடியுமோ வென்னில், தானே கார்ச்யத்தை யடைந்தபடியால் அது எனக்கு அசக்யமன்று காண், என்கிறாள். வ்ருதா க்ருசாஸவ: - வ்ருதோபவாஸங்களால் இளைத்துப்போன, அதாவது மாணத்துக்குப் பாதிவழியில் இருக்கிற ப்ராணன்கள், என்றபடி.

* திருவாய். iv. 8. 10.

அன்றிக்கே, வ்ரதகூரமாநு - லோகத்தில் ப்ராணனை வைத்துக் கொண்டிருப்பது, 'ஏதி ஜீவந்தமாநந்தோ நரம் வர்ஷ ஶதாதபி', என்றேனுமொருநாள் தான் ஸுகம்பெறலா மென்கிற நசையாலே. எனக்கு இப்பொழுது கிடைக்காத உம்முடைய அநுக்ரஹம் இனி எந்தக் காரணத்தால் கிடைக்கப்போகிறது. ஆகவே அந்த நசையுமில்லாமையாலே, இதுவரையி லநுபவித்த, * 'மாசுடை யுடம்பொடு தலையுலறி வாய்ப்புறம்வெளுத் தொருபோது முண்டு' என்றபடி பட்டகஷ்டங்களெல்லாம் அமையும், என்கிறாள். இப்படியாகில் உனக்கென்ன வித்தித்தது என்னில், மேல் சொல்லுகிறாள், 'ஶதஜந்மஸஹஸ்ராம்', என்று.

இங்கே ஶதமென்றது உபலக்ஷணம். அனேக ஜந்மங்கள் கழித்தாவது எனக்கு அது கிடைக்கும். அன்றிக்கே, இப்பொழுது ப்ராணனை விட்டாயாகில் அடுத்த ஜன்மத்தில் உன் அபீஷ்டம் கிடைக்கு மென்பது என்ன நிச்சயம்? அப்படிக் கிடைக்காமல் அந்த ஜன்மத்திலேயும் இப்படியே மரணமடைய நேரிட்டால் என்செய்வாய்? எனச் சொல்லுகிறாள், ஶதஜந்மஸஹஸ்ராம் - அனேக மாயிரம் ஜன்மங்களிலும் இப்படியே ப்ரார்த்தித்து இஷ்டத்தைப் பெறாமல் மரணமடைவேன். அதனாலுனக்கென்ன வித்திப்ப தென்னில்,

† 'கதியென்றுந் தானாவான் கருதாதோர் பெண்கொடியை
வதைசெய்தா ரென்னும்சொல் வையகத்தார் மதியாரே.'

ஸர்வரக்ஷகனை ஒருவன் அவனையே நம்பியிருந்த ஒரு பெண்ணை ரக்ஷிக்காமல் அவள் மரணமடையக் காரணமானான், என்கிறவார்த்தையை லோகத்தார் தெரிந்துகொள்ள மாட்டார்களோ? லோகத்திலெங்கும் கருணாநிதியென்று பெயர் பெற்று அதனால் எல்லா ஆர்யர்களும் வந்து சரணம்புகும்படி நின்றவனுடைய ப்ரஸித்

---

* நாச் - திரு. i. 8.
† ஷை viii. 9.

தியை யழித்து நிஷ்கருணனென்று பெயராகும்படி பண்ணுகி றேன், என்றாளாகவுமாம்.

அன்றிக்கே 'ஶதஜந்மஸஹஸ்ராஸு' என்று பாடமானபோது, அநேகமாயிரம் ஜன்மங்கள் இப்படிப்பல மடையாமல் முடிந்தா லும் என்னபீஷ்டம் கிடைக்காமற் போகாது. என்றேனும் ஒரு நாள் கிடைத்துவிடும். அவனுக்கும் நமக்குமுள்ள சேஷசேஷி பாவ ஸம்பந்தம் * 'உறவேலுன்றன்னோடுறவேல் நமக்கிங்கொழிக்க ஒழியாது', என்றபடியே, நம்மாலும், அவன் தன்னாலும், இருவரும் சேர்ந் தாலும் ஒழிக்க ஒழியா தாகையாலும் சேஷி சேஷபூதனை ரக்ஷிக்கை ஸ்வத꞉ப்ராப்தமாகையாலும் நம்முடைய ரக்ஷை தவறாது, என் றாளாகவுமாம். அன்றிக்கே, ஶதஜந்மஸஹஸ்ராஸு - 'நீயல்லவோ முடியப்போகிறாய். அத்தாலெனக்கென்ன நஷ்டம்' என்றிருக் கிறாய் நீ. அதுவோ உன் கருத்து?

† 'தொழுதுமுப் போதுமுன் னடிவணங்கித் தூமலர் தூய்த் தொழு தேத்துகின்றேன், பழுதின்றிப் பாற்கடல் வண்ணனுக் கே பணிசெய்து வாழப் பெறாவிடில்நான், அழுதழு தலமர்ந் தம் மாவழங்க ஆற்றவு மதுவுனக் குறைக்குங் கண்டாய், உழுவதோ ரெருத்தினை நுகங்கொடு பாய்ந்து ஊட்டமின் றித்துறந் தாலொக் குமே'.

இந்தப் பெண்கொடியை, உபேக்ஷித்த பாவம் உன்னை நூறு ஜன்மங்களாலும் அநுபவித்தும் முடியாததாகு மென்கிறாளாகவு மாம்.

சே. நரஸிம்ஹமாசாரியர்.

---

* திருப்பாவை. 28.

† நாச் - திரு. i. 9.

# ப்ரச்நங்கள்.

## (1)

### க்ரஹணத்தின் தத்வம்.

1. 𑌛𑌾𑌨𑍍𑌦𑍋𑌗𑍍𑌯 உபநிஷத்தில் "𑌅𑌶𑍍𑌵 𑌇𑌵 𑌰𑍋𑌮𑌾𑌣𑌿 𑌵𑌿𑌧𑍂𑌯 𑌪𑌾𑌪𑌂 𑌚𑌨𑍍𑌦𑍍𑌰 𑌇𑌵 𑌰𑌾𑌹𑍋𑌰𑍍𑌮𑍁𑌖𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌮𑍁𑌚𑍍𑌯" என்கிற வாக்யத்தினால் க்ரஹணகாலத்தில் ராஹுவினால் சந்த்ரன் விழுங்கப் படுகிறானென்று அர்த்தமாகிறது.

2. ஸ்ரீமத் ராமயணத்திலும் ஸுந்தர காண்டத்தில் "[illegible]" என்பது முதலான வாக்யங்களால் சந்த்ராதிகளுக்கு க்ரஹணகாலத்தில் துககமுண்டாவதுபோல் காணப்படுகிறது.

3. 'அடலுரக முண்டுமிழ்ந்த வருக்கன்போல' எனகிற ஸ்ரீ தேசிக ஸூக்தியாலும் இந்த ஆத்தம் அநுவதிக்கப் படுகிறது.

4. ஸ்ரீ பாகவதம் 5-வது ஸ்கந்தம், 24-வது அத்யாயத்தில் '𑌯𑌃 𑌪𑌰𑍍𑌵𑌣𑌿 𑌤𑌦𑍍𑌵𑍍𑌯𑌵𑌧𑌾𑌨𑌕𑍃𑌤𑍍 𑌵𑍈𑌰𑌾𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑌃 𑌸𑍂𑌰𑍍𑌯𑌾𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌸𑌾𑌵𑌭𑌿𑌧𑌾𑌵𑌤𑌿' என்கிற வாக்யத்தில் '𑌵𑍍𑌯𑌵𑌧𑌾𑌨' ஶப்தத்தினாலும், அதன் வ்யாக்யானமான '[illegible]' என்கிற வாக்யததினாலும் மறைப்பதே க்ரஹணமென்று ஏற்படுகிறது. அப்படியானால் முன்சொன்ன துக்கத்துக்கு ஹேதுவில்லை.

5. ஆகையால் ஶ்ருதி விருத்தமானதால் இந்த விஷயத்தில் புராணம் அநாதரணீயமா? அல்லது, ஶ்ருத்யநுகுணமாய் புராணம் அர்த்தம் பண்ணப்படவேண்டியதா? அல்லது புராணாநுகுணமாய் ஶ்ருதியை நயநம் பண்ணவேண்டுவது யுக்தமா? இந்த ஸந்தேஹத்தை அபிஜ்ஞர்கள் தெளிவிக்க வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறேன்.

கண்கொடுத்தவணிதம். அற்பசிமீ 22உ. } விஜய ராகவ தாஸன்.

---

## (2)

## துளஸீக்ரஹணம்.

1. துளஸீக்ரஹணத்துக்குக் கால நியமங்களும் மந்த்ர நியமங்களும் ஶாஸ்த்ரங்களில் சொல்லியிருப்பது எல்லார்க்கும் ப்ரஸித்தம். அப்படியிருக்க ஸ்ரீரங்காதி ஸ்தலங்களிலும் மற்ற இடங்களிலும் மந்த்ராதி நியமாநர்ஹர்களான ஶூத்ரர்களும் ஶூத்ரைகளும் அதை க்ரஹித்துவருவது வழக்கமாயிருக்கிறதே? இந்த ஆசாரம் ஸிஷ்ட ஸம்மதமாயுமிருக்கிறதே? இது யுக்தமா? இந்த ப்ரச்நத்துக்கும் வித்வான்கள் ப்ரதிவசனம் செய்வார்களென்று ப்ரார்த்திக்கிறேன்.

கண்கொடுத்தவணிதம். அற்பசிமீ 22உ. } விஜய ராகவ தாஸன்.

---

**பூர்ணசந்த்ரோதயம்.**—சென்ற இரண்டரை வர்ஷகாலமாய் நடைபெற்றுவரும் **பூர்ணசந்த்ரோதயம்** என்னும் சிறந்த மாதாந்தரப்பத்ரிகை நமக்கு அனுப்பப்பட்டுவருகிறது. இது மதுரையில் பிரஹ்மஜ்ஞாநக்கிளைச் சங்கத்தாருடைய ஆதரவின்பேரில் ப்ரஹ்ம ஸ்ரீ. நாராயணஐயர். B. A. B. L. F. T. S. அ. ரங்கஸாமிஐயர். B. A. B. L. F. T. S. ஆகியஇரண்டு பத்ராதிபர்களால் ப்ரசுரப்படுத்தப்பட்டு வெளிவருகிறது. இதில் ப்ரஹ்மஜ்ஞாந (Theosophy) விஷயமான பல சிறந்த வ்யாஸங்களும், யோகம், வேதாந்தம், ஸ்ம்ருதி, புராணங்கள் சம்பந்தமான பற்பல உபந்யாஸங்களும் இன்னும் கல்பிதமான விவேகத்தை வ்ருத்திசெய்யும் கதைகளும் வெளிவருகின்றன. பல கற்றறிந்த தமிழ் வித்வான்கள் இதற்கு விஷயங்கள் எழுதி வருகிறார்களாகையால் இதைப்படிப்பது மிகவும் ஆநந்தகரமாயிருக்கிறது. இதன் வருஷச்சந்தா ரூ. 2—0—0.

☞ [கடிதங்கள் எழுதுகிறவர்களுக்கு அறிக்கை.—கடிதங்கள் எழுதுகிறவர்களின் அபிப்ராயங்களுக்குப் பத்ராதிபர் உத்தரவாதமில்லை. கடிதங்கள் நல்ல காகிதத்தில் ஒருபக்கத்தில் தெளிவாக எழுதப்படவேண்டும். எழுதுகிறவர்கள் பெயரும் விலாஸமும் பத்ராதிபருக்கு வ்யக்தமாய் அறிவிக்கப்படவேண்டும். வேதாந்ததீபிகை பத்ராதிபர்.]

# கடிதங்கள்.



ஸ்ரீ:

## ஸ்ரீ அஹோபில யாத்திரை.



ஸ்ரீ வேதாந்ததீபிகை பத்ராதிபருக்கு.

*வாழ்குமரன் மேற்கனக வஞ்சகன்மே லோர்முகத்தே*
*சூழ்கருணை யும்முனிவுந் தோன்றியவால்—கேழ்கிளரும்*
*அங்கவேள் குன்ற வழல்சரபத் தைப்பிளந்த*
*சிங்கவேள் குன்றத்தி னூர்க்கு.*

திவ்யகவி பிள்ளைப்பெருமாளையங்கார்.

ஸ்ரீ ஸந்நிதி சிஷ்ய ஸபையார் ஸ்ரீ அஹோபில ஸந்நிதியின் பூர்வீகப் பெருமையையும் வைபவத்தையும் ப்ரகாசப்படுத்தின மஹோபகாரத்திற்குக் கைம்மாறு இல்லாவிடினும், அந்த உபகாரத்தினடியாக அநேகருக்கு ஸ்ரீ அஹோபிலத்தை ஸேவித்து வரவேணு மென்கிற ஆசை உண்டானதே ப்ரதிக்ருதமாக அந்த ஸபையார்கள் நினைப்பார்கள் என்பதற்குச் சந்தேகமில்லை. இப்படி ஆசை உண்டானவர்களி லொருவனான அடியேன் அது தலைக்கட்டும் நாள் வாய்க்காத வளவிலே "ரம்ய யாத்ரா தினே தினே" என்றபடி திக்கு நோக்கித்தண்டனிட்டு நிற்கிற காலத்தில், தற்செயலாக ஒருஸமயம் ஏற்பட்டு, அஹோபில யாத்திரையாகப் புறப்பட்டேன்.

சென்னையில் முதல் நாள் இராத்திரி 9¼ - மணிக்கு பம்பாய்மெயில் வண்டியில் புறப்பட்டு விடியற்காலம் 3-50-க்கு எற்றகுண்டலா என்கிற ஸ்டேஷ

னில் இறங்கினேன். இறங்கினதும் அங்கே "ஓபய்யா" "ஓபலய்யா" என்று ஒருவரை யொருவர் ஆஹ்வானம் செய்வதைக்கேட்டு, 'இது அஹோபிலம் என்கிற திவ்யதேசத்தின் எல்லைநிலமாகையால் அந்த திவ்யதேசத்தின் திருநாமத்தால் பெயரிட்டழைக்கிறார்கள்' என்கிற எண்ணமும் அதனடியாக ஸந்தோஷமும் ஜநித்தன. ஸ்டேஷனுக்கு வெளியேவந்து 8-மைல் தூரத்திலுள்ள புரோதத்தூர் என்கிற ஊருக்கு எட்டணுவுக்கு மாட்டுவண் டிபேசிச் சென்றேன். வழியில் மண்ணுவது சுண்ணும்பாவது கலவாமல் கடப்பைக்கற்களால் அமைக்கப்பட்ட வீடுகளே காணப்பட்டன. ஜலமில்லாமல் வற்றிக் கிடந்த பெண்ணையாற்றைக்கடந்து பனைத்தோப்புவழியாக காலை 9-மணிக்கு புரோதத்தூரை யடைந்தேன்.

அவ்வூரில் ஒரு வைஷ்ணவாலயமிருக்கிறது. இக்கோயில் பூசாரிக்கு (அந்தத்தேசத்து அர்ச்சகருக்கு இப்படித் திருநாமம்) அஹோபிலமடத்தில் ஸமாச்ரயணம் என்கிற ப்ரஸ்தாவமுண்டாகையால் இந்தக் கோயில் ஒருகாலத்தில் ஸ்ரீ ஸந்நிதியின் ஆதீனத்தில் இருந்திருக்க வேண்டுமென்று நினைக்க இடமுண்டாகிறது. மேலும், களத்தூர் அழகியசிங்கர் எழுந்தருளியிருந்தகாலத்தில் இவ்வூரார் ஸ்ரீ ஸந்நிதிக்குப்போய் ஷை கோயிலுக்குத் தீர்த்த பரிக்ரஹம் உண்டாக்கி வைக்கவேண்டுமென்று ப்ரார்த்தித்ததாயும், அதற்குக் காணிக்கையாக அபேக்ஷிக்கப்பட்ட த்ரவ்யத்தை இவர்கள் ஸமர்ப்பிக்க அசக்தர்களாய்த் திரும்பிவிட்டார்களென்றும் சொல்லிவருகிறார்கள்.

புரோதத்தூரிலிருந்து அஹோபிலத்துக்கு அல்லகட்டா என்னுமூர் வழியாகப்போவது ஸுலபம். அல்லகட்டா சிறுவேல் தாலூகாவுக்கு ப்ரதான ஸ்தானம். இராத்திரியில் பிரயாணம் செய்தாலும் மார்க்கத்தில் பயமில்லை யென்று கேட்டு, இராத்திரி 10-மணிக்கு புரோதத்தூரைவிட்டு மறுநாட் காலை 9-மணிக்கு அல்லகட்டா வந்து சேர்ந்தேன். அங்கே வஸதியான லோகல்பண்டு சத்திர மொன்றிருக்கிறது ; அதில் தங்கினேன். மார்க்கத்தில் இராத்திரிவேளையில் அடிவானத்தில் ஸ்தூலமாய்ப் புலப்பட்ட நல்லமலைத் தொடரில் எரியாநின்ற காட்டுத்தீயானது அத்புதமான காட்சியாக விளங்கிற்று. இந்தக்காட்சியைக்கண்டு விஸ்மித்த திருமங்கை யாழ்வார்,

*"நின்றசெந்தீ மொண்டுசூறை நீள்விசும் பூடிரிய
சென்று காண்டற் கரியகோயில் சிங்கவேள் குன்றமே."

என்று அருளிச்செய்த பாசுரத்தில் அதிசயோக்தி ஒன்றுமில்லை யென்று தெரிந்தது. காண்டற்கரிய கோயிலாகையால் ஸ்ரீ அஹோபிலத்தை நேரில்

---

* இந்தக் கடிதத்தில் உதாஹரித்த பாட்டுகளைப் பெரிய திருமொழி முதல் பத்து 7-ம் திருமொழியில் காண்க.

ஸேவிக்காதவர்களுக்கு உபயோகமாக அவ்விடத்து ஸந்நிவேசங்களைப் படங்களில் பிடித்து வைப்பதற்காகத் தகுந்த ஸகாயமாக ஒரு மனுஷ்யரைக் கூட்டிக்கொண்டு, இராத்திரியே அல்லகட்டாவைவிட்டு அஹோபிலம் நோக்கிச் சென்றேன். இராத்திரிமுழுதும் பிரயாணம் செய்தோம். அருணோதயத்தில் உத்தேச்யமான திவ்யதேசத்தின் எல்லையை அடைந்தோம். "தெரிந்த வேயின் முழையுணின்று நீணெறிவா யுழுவை, திரிந்தவானைச் சுவடுபார்க்குஞ் சிங்கவேள் குன்றமே" என்கிறபடியே காடடர்ந்து வளர்ந்திருந்த பர்வத ப்ரதேசங்கள் கண்ணுக்குத்தெளிவாய்ப் புலப்பட்டன. வழியில், புதர் மூடிநின்ற மண்டபங்களும், இடையிடையே புல்லும் முள்ளும் வ்ருத்தியாகி மனுஷ்ய ஸஞ்சாரத்தைப் பெறாத கோனேரிகளும், ஸந்நிதி ஸாமீப்யத்தைக்காட்டின. சிறிது நேரத்துக்கெல்லாம் அந்த மலைவாஸிகளுடைய குடிசைகளைக்கண்டோம். இவைகளைத்தாண்டி மலைப்புறமாக வண்டி திரும்பியதும், எதிரில் விருக்ஷங்கள்மத்தியில் பூர்ணமாய் வெளுக்காத கீழ்வானத்தின்மேல் தாங்கினதுபோல் நின்ற ஒரு வெண்மையான விமானம் ஸேவையாயிற்று. வண்டியினின்றும் கீழே இறங்கி, விமானத்திற்கு அஞ்சலிசெய்து ஹ்ருஷ்டர்களாய், கால்நடையாய் ஸந்நிதியைக்கிட்டினோம். ப்ரஸித்தமான இந்த ஸந்நிதியின் விமானத்தில் ப்ரகாசமான கலசங்க ளொன்றுமில்லை. ப்ராகாரத்திற்கு நாற்புறமும் காணப்பட்ட மணல்மேடுகள் அங்கே பூர்வத்தில் திருமாளிகைகள் இருந்தனவாகத் தெரிவித்தன. ப்ராகாரமுழுவதும் புல் பூண்டுகள் முளைத்துக்காடாய் வ்ருத்தியடைந்திருப்பதோடு மதில்களும் பலவிடங்களில் இடிந்து விழுந்திருக்கின்றன. எந்த இடத்தைப் பார்த்தாலும் விசாரணைக்குறைவும் அநாதரவும் மேலிட்டு இருப்பதாய்த் தெரிந்தது. ப்ரதக்ஷிணமாகவந்து ஸந்நிதியின் கீழ்வாசலில் வந்தோம். இந்தவாசலுக்கு நேராக உள்ள திருவீதியில் விமானத்துடன்கூடின நாற்கால் மண்டபங்கள் அடுத்தடுத்து நிற்கின்றன. உத்ஸவ காலங்களில் இந்த மண்டபங்களில் ஸ்ரீ லக்ஷ்மீ ந்ருஸிம்ஹன் ஸேவார்த்திகளுக்கு ஸேவை தந்தருள்வதற்காக இவைகள் ஏற்பட்டிருக்கவேண்டும் என்பதற்குச் சந்தேகமில்லை. வீதியின் இரண்டு பார்ச்வங்களிலும் தாழ்வான கல்கட்டடங்கள் புல்மூடிக் காணப்படுகின்றன. இவைகள் பூர்வத்தில் கடைகளுக்காக உபயோகப்பட்டுவந்தன வென்று தோன்றுகிறது. இந்தவீதிக்கு அடுத்த தென்வடலாய்ப்போகிற வீதியிலும் இம்மாதிரியான மண்டபங்கள் இருக்கின்றன. ஆனால் இவைகளைப் பாரஸ்டு இலாகாவில் சேர்த்துவிட்டார்க ளாகையால் ஸந்நிதிக்கு இனிச் சேர்ந்தனவாகச்சொல்ல இடமில்லை. கீழ்வாசலில் கோபுரமில்லை. இந்த வாசல் வழியாக ஸந்நிதியுள்ளே சென்றால் வளர்ந்திருக்கும் புற்பூண்டுகளும் முட்செடிகளும் கொஞ்சத்தில்



கீழ் அஹோபிலம் - ஸந்நிதிவீதி.



கீழ் அஹோபிலம் - புஷ்கரிணி.

கால்பாவ விடுகிறதில்லை. ப்ரஹ்மோத்ஸவகாலத்தில் கவர்ன்மெண்டார் இந்த விடத்தில் தீவைத்து இவைகளைக் கொளுத்தி விடுகிறார்கள். இதற்கு வட புறத்தில் ஸ்ரீபாஷ்யக்காரர் ஸந்நிதியும் தென்புறத்தில் ஸந்நிதி புஷ்கரிணியும் இருக்கின்றன. புஷ்கரிணியின் படித்துறைகள் இடிந்து கிடக்கின்றன. முன்பு இதற்கு வந்து கொண்டிருந்த நீர்க்கால் இப்பொழுது தூர்ந்துவிட்டபடியால் புஷ்கரிணி வறண்டிருக்கிறது. அதன் மத்தியில் இருக்கும் கிணற்றிலிருந்து சேற்றுடன் மிஶ்ரமான ஜலந்தான் உபயோகப்பட்டு வருகிறது. இந்த ஜலத்தை உபயோகிப்பதால் வயிற்றில் கட்டியும் ஜ்வரமும் உண்டாகின்றன என்பது ஆச்சரியமில்லை.

ஸ்ரீபாஷ்யக்காரர்ஸந்நிதி முகமண்டபத்தோடு கூடி அழகாய் அமைக்கப்பட்டிருக்கிறது. ஷை ஸந்நிதிக்குக் கதவு கிடையாது. ஸந்நிதியில் மூலவரான ஸ்ரீ பாஷ்யக்காரர்தான் எழுந்தருளி யிருக்கிறார். இந்த ஸந்நிதியில் ஆராதனம் நடக்கவில்லை. உத்ஸவகாலங்களில் முகாம் போட்டுக்கொள்ளுகிற உத்யோகஸ்தர்கள் இந்த ஸந்நிதியில் இறங்கிவருவதாகத் தெரிகிறது.

இரண்டாவது வாசலிலும் கோபுரமில்லை. இதைத்தாண்டிச் சென்றால் இன்றைக்கோ நாளைக்கோ விழும் என்னும் படியான த்வஜஸ்தம்பம் நிற்கிறது. இதன் இரண்டு பக்கங்களிலிருக்கும் மண்டபங்கள் அவ்விடத்திற்கு வரும் வண்டிமாடுகள் கட்டும் இடங்களாக உபயோகப் பட்டு வருகின்றன.

இதற்கு எதிரில் மூன்றாவது வாசல். இங்கே சிலாசாஸனங்கள் தனித்தனியாக நட்டு வைக்கப் பட்டிருக்கின்றன. இவைகள் என்ன ஶாஸனங்களோ ஒருவருக்கும் தெரியாது. இந்த வாசலின் மேலிருந்த கோபுரத்தைச் சிலவருஷங்களுக்குமுன் அப்போதிருந்த மடத்து அதிகாரிகள் இடித்துவிட்டார்களாம்; பின்பு புதிதாய்க் கோபுரம் கட்டுவதற்காக ஒருவித முயற்சியும் செய்யப்பட்டதாகக் காணப்படவில்லை. இந்த வாசல் வழியாக உள்ளே சென்றால் பூர்த்திபெறாத மிகநேர்த்தியான மண்டபம் ஒன்று காணப்படுகிறது. இதைப்பார்த்த துரை ஒருவர் இம்மண்டபம் பூர்த்தியாய் முடிந்திருந்தால் இதற்கு ஸமானமான மண்டபம் வேறே இராது என்று அபிப்பிராயப் பட்டிருக்கிறார். தென்புறத்தில் பெரிதான பல கல்தொட்டிகளோடு கூடின விசாலமான திருமடைப்பள்ளி அமைக்கப் பட்டிருக்கிறது. தென்மேற்கு மூலையில் ஸ்ரீவரதன் ஸந்நிதியும் கல்யாண மண்டபமு மிருக்கின்றன. இந்த மண்டபத்திலும் வேறிடத்திலும் ஸ்ரீ ஆதிவண் சடகோபஸ்வாமிக்கு பெருமாள் காஷாயம் தந்தருளின வ்ருத்தாந்தத்தை சித்ரரூபமாய் ஸேவிக்கலாம். ஆழ்வார்கள் ஸந்நிதியும், பட்டாபிராமன் ஸந்நிதியும் மற்றொருபக்கத்திலிருக்கின்றன. இந்த ஸந்நிதிகளிலும் திருவாராதனம் கிடையாது. முதல் முதல் தென்பட்ட விமானத்தின்கீழ் பெருமாள் ஸந்நிதியும் பக்கத்தில் லக்ஷ்மீ ஸந்நிதியும் இருக்கின்றன. பெருமாள் ஸந்நிதியில் உத்ஸவமூர்த்தி வெகு

ஸுந்தரமாக ஸேவை ஸாதிக்கிறார். இந்த ஸந்நிதிகளில் ஏற்படும் உபசார, திருவாராதனாதிகளில் குறைவுகளையெல்லாம் ஆப்தர்களான ஸ்வாமிகளைக் கொண்டு விசாரித்து அவைகளை நிவர்த்தி செய்வதற்கான ஏற்பாடுகளை ஸ்ரீ அழகிய சிங்கர் நியமித்தருள வேணுமென்று ப்ரார்த்திக்கிறேன்.

— இந்த ஸந்நிதியிலிருந்து மேல் அஹோபிலம் ஐந்துமைல். "கனைத்ததீயும் கல்லுமல்லா வில்லுடை வேடருமாய்" என்றும், "காய்த்தவாகை நெற்றொலிப்பக் கல்லதர் வேய்ங்கழைபோய், தேய்த்ததீயால் விண் சிவக்கும்" என்றும், "நெல்லிமல்கிக் கல்லுடைப்பப் புல்லிலையார்த் ததர்வாய், சில்லி சில்லென் றொல்லறாத்" என்றும், அருளிச் செய்யப்பட்டபடியே, அடர்ந்த காடுவழியாகப் போய் பவநாசினீ என்னும் நதியில் ஜலங்கள் விழுந்தெழும் ஓசையும், தீயெழுந்து சூறையாடி இரையும் இரைச்சலும், வ்யாக்ரங்கள் கர்ஜித்து அதன் ப்ரதித்வானங்களும் எங்கும் நிறைந்திருக்கும் மார்க்கத்தில் உத்தேஶமாய்ச் சென்றால் "தெய்வமல்லால் செல்ல வொண்ணாச் சிங்கவேள் குன்றத்தை" யடைந்து, "செங்கணாளியிட்டிறைஞ்சும் சிங்கவேள் குன்றுடைய எங்களீச னெம்பிரானை" ஸேவிக்கலாம்.

மேல் அஹோபிலம் ஸந்நிதியின் விமாநஸேவையையும் கீழ் அஹோபிலம் ஸந்நிவேசங்களையும் காட்டக்கூடிய படங்கள் இந்த ஸஞ்சிகையில் அமைக்கப்பட்டிருக்கின்றன.

இந்த ஸந்நிதிக்கு வருஷம் 1 - க்கு உத்ஸவ வரும்படிகள் உள்பட ரூ. 3500 வரக்கூடுமென்றும் ஸகல செலவுகளு முள்பட ரூ. 1200-செலவாகலாமென்றும் அங்கு விசாரித்ததில் தெரியவருகிறது. க்ரமமாய் எல்லாச் செலவுகளும் இப்போது செய்யப்பட வில்லை யென்றும் தெரிகிறது. இப்போது ஒரு குத்தகைதாரர் சுமார் ரூ. 1000 - வரும்படியுள்ள குண்டாலா க்ராமம் நீங்கலாக மற்றெல்லா வரும்படிகளையும் அனுபவித்துக் கொண்டு எல்லாச் செலவுகளையும் செய்ய ஒப்புக்கொண்டு ரூ. 300. ஸ்ரீ ஸந்நிதிக்குக் கொடுத்து வருவதாய்த் தெரியவருகிறது.

இந்த ஸந்நிதியைச் சேர்ந்த கட்டடங்களைச் சீர்செய்து ஆராதநங்களையும் க்ரமமாய் செய்வித்து வரவேண்டியது ஸ்ரீ ஸந்நிதிக்கு முதல் உத்தேஶ்யமாய் எண்ணப் படவேண்டும். இது விஷயத்தில் ஸந்நிதி சிஷ்யர்கள் ஸ்ரீ அழகிய சிங்கரிடத்தில் தகுந்தபடி விஜ்ஞாபநம் செய்து இதன் ஆவச்யகதையைத் திருவுள்ளத்தில் படும்படியாய்ச் செய்யவேணு மென்பது இது எழுதினதின் கருத்து.

ஸ்ரீ அஹோபில நம்பி.

ஸ்ரீ:.

ஸ்ரீமதே லக்ஷ்மீந்ருஸிம்ஹ பரப்ரஹ்மணே நம:.

# பிரிவுகளின் அறிக்கை.

## மதிராஸ் - சைதாப் பேட்டை பிரிவு.

சென்ற நவம்பர்மீ 17உ ஞாயிற்றுக்கிழமை திநம் பகல் 4-மணிக்குத் திருவல்லிக்கேணி ஸ்ரீ. அஹோபில மடத்தில், ஷை பிரிவின் வருஷாந்தச் சங்கம் சேர்ந்தது. அப்பொழுது, ஸபையின் அத்யக்ஷராகிய ஸ்ரீ. டி. ராஜகோபாலாசாரியர் அக்ராஸநாதிபதியாக இருந்தார். சென்ற ஸெப்டம்பர்மீ 30-உ யுடன் முடிவான வருஷத்தின் அறிக்கையும் அவ்வருஷத்தின் வரவு செலவு கணக்கும் படிக்கப்பட்டு அங்கீகரிக்கப் பட்டன. பிறகு ப்ரக்ருத வருஷத்திற்காக பின்வருமாறு மானேஜிங் கமிட்டியார் நியமிக்கப் பட்டார்கள் :

| | |
|---|---|
| ஸபாத்யக்ஷர் :— | ஸ்ரீ. டி. ராஜகோபாலாசாரியர். |
| உபஸபாத்யக்ஷர் :— | ,, வி. ராகவாசாரியர். |
| கார்யதர்ஸி :— | ,, எஸ். வாஸுதேவாசாரியர். |
| இதர மெம்பர்கள்: — | ,, ஸி. துரைஸ்வாமி ஐயங்கார். |
| ,, | ,, ஆர். க்ருஷ்ணமாசாரியர். |
| ,, | ,, ஆர். நரஸிம்ஹ ஐயங்கார். |
| ,, | ,, ஸி. ஸ்ரீநிவாஸாசாரியர். |
| ,, | ,, டி. வெங்கடராம ஐயங்கார். |
| ,, | ,, டி. ஆர். கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார். |

இது முடிந்தவுடன், பொது ஸபையின் எக்ஸிக்யுடிவ் போர்டில், 16-வது விதிப்படி, இந்தப் பிரிவின் ப்ரதிநிதியாக இருக்கும் பொருட்டு ஸ்ரீ. வி. ராகவாசாரியர் நியமிக்கப் பட்டார். பிறகு, திருப்பாவையில் எட்டாவது பாசுரத்தைப்பற்றி ஸ்ரீ. சேட்லூர். நரஸிம்ஹமாசாரியருடைய உபந்யாஸம் நடந்தது. பிறகு ஸங்கம் கலைந்தது.

---

### ஷை பிரிவின் சென்றவருஷத்திய அறிக்கை.

சென்ற வருஷத்தில் பிரிவின் அங்கத்தினர்கள் தொகை 57. இவர்களில் 10-பெயர்கள் முதல் வகுப்பினர், 46-பெயர்கள் இரண்டாவது வகுப்பினர்; ஒருவர் அஸ்ஸோஷியேட்.

வருஷம் ஆரம்பம்முதல் வருஷம்முடிவுக்குள் 9-மீடிங்குகள் நடந்தன. இவைகளில், ராஜபக்தியைப்பற்றி ஸ்ரீ. வெங்கடராமஐயங்கார் செய்த உபந்யாஸமும், மடத்து விஷயங்களைப் பற்றியும் ஸபைவிஷயங்களைப் பற்றியும்

நடந்த இரண்டு ஆலோசனை சங்கங்களும் ஆக மூன்று மீட்டிங்குகள்போக, பாக்கி 6 - மீடிங்குகள் ஸ்ரீ. சேட்லூர் நரஸிஹ்மாசாரியருடைய திருப்பாவை ஸம்பந்தங்களான உபந்யாஸங் களுக்காகவே சேர்க்கப்பட்டன. இந்த உபந்யாஸங்கள் மிகச்சிறந்தவையாக இருந்தபடியால், ஸங்கங்கள் எல்லாம் பல ஸ்ரீ வைஷ்ணவர்களால் அலங்கரிக்கப் பட்டிருந்தன. இவ்விதமாக உபந்யாஸம் செய்த ஸ்வாமிகளுக்கும், இன்னும் மற்றவிதமாக உபகரித்த ஸ்வாமிகளுக்கும் ஸபையாருடைய க்ருதஜ்ஞதை ஆவிஷ்கரிக்கப்படுகிறது.

ஸபையின் ஆய வ்யயங்கள் அதிக த்ருப்திகரங்களாக இல்லை. அங்கத்தினர்களில் அநேகர் இன்னும் தங்களுடைய சந்தாத் தொகையை செலுத்தாமல் இருக்கிறார்கள். கார்யங்களின் ஸித்தி பெரும்பாலும் ப்ரவர்த்தகர்களின் ஊக்கத்தை சார்ந்திருப்பது உண்மையே ஆனாலும், அநேகமாக அர்த்தாதீநமாகவும் இருக்கிறது என்பது எல்லாராலும் அங்கீகரிக்கத் தகுந்தது. ஆகையால் ஶ்ரத்தாளுக்களான இந்த ஸபையின அங்கத்தினர்கள் எல்லாரும் ஸரியான காலத்தில் தங்கள் சந்தாவைச் செலுத்தி உபகரிப்பார்களென்று நம்புகிறோம்.

---

வருஷாந்த வரவு செலவு கணக்கு.

| 1912-ம் ஸூ | | | வரவு. | | | செலவு. | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| வரவு. | சென்ற வருஷத்திய பாக்கி | ரூ. | 0 | 2 | 11 | | | |
| ,, | முதல் வகுப்பினரின் சந்தா | ,, | 20 | 0 | 0 | | | |
| ,, | இரண்டாவது ஷை | ,, | 13 | 0 | 0 | | | |
| ,, | உபந்யாஸ ஸம்பந்தமான ஸ்பெஷல் சந்தா | ,, | 7 | 4 | 0 | | | |
| செலவு. | ஸபையின் 26-வது விதிப்படி பொதுக் காரியதர்ஶிக்கு அனுப்பியது | ,, | | | | 13 | 3 | 3 |
| ,, | ஸ்ரீ. சேட்லூர் நரஸிஹ்மாசாரியருக்கு உபந்யாஸார்த்தம் ஸமர்ப்பித்துக்கொண்டது | ,, | | | | 13 | 0 | 0 |
| ,, | ஸ்டாம்பு வகையரா | ,, | | | | 3 | 8 | 6 |
| ,, | அச்சுக்கூலி | ,, | | | | 1 | 0 | 0 |
| | ஆக | ரூ. | 40 | 6 | 11 | 30 | 11 | 9 |
| ,, | 30—9—12 ல் இருப்பு | ,, | | | | 9 | 11 | 2 |
| | ஆக | ரூ. | 40 | 6 | 11 | 40 | 6 | 11 |

மயிலாப்பூர், 17-11-02.

எஸ். வாஸுதேவன்.

கார்யதர்ஶி.

ஸ்ரீ:

# பத்ராதிபரின் குறிப்புகள்.

**நமது புதிய கவர்ணர் அவர்கள்.**

நம்முடைய ராஜதானிக்குச் சிலதினங்களுக்குமுன் புதிதாய் விஜயஞ்செய்து, நம்மெல்லோரையும் இனிபாதுகாக்க இந்த நகரத்தில் ராஜப்ரதிநிதியாய் கவர்ணர் என்னும் அதிகாரத்தை வஹித்துவரும் லார்ட் பெண்ட்லண்டு துரையவர்களுக்கும் அவர் பார்யையாகிய லேடி பெண்ட்லண்டு அம்மாளுக்கும் நாம் வணக்கத்துடனும் பக்தியுடனும் இந்த சமயத்தில் நல்வரவு கூறுகிறோம். ப்ரஜைகளின் க்ஷேமம் ராஜாக்களாலென்பதை நன்றுயறிந்த நாம் பலவிதங்களில் அநுபவித்துவரும் க்ஷேமங்களுக்காக துரைத்தனத்தாரிடம் க்ருதஜ்ஞதை பாராட்டிவருவது அவசியம். அந்த துரைத்தனத்தாரின் கார்யங்களை இப்போது ப்ரதாநமாய் நியமித்துவருகிற கவர்ணரவர்கள் விசேஷமாய் ப்ரஜைகளின் நன்மையைக் கருதுகிறவரென்றும், அவரால் நமக்கு மிகுந்த அநுகூலங்கள் உண்டாகுமென்றும் அவரை முன்னதிகாரங்களில் அறிந்தவர்கள் ஏகமுகமாய்ப் புகழ்ந்து பேசுகிறார்கள். இங்கு அவர் வந்த ஒரு மாசமாயும் நாம் பார்த்து வருவதில் அவர் ஸௌலப்யமும் ப்ரஜைகளின் விஜ்ஞாபநங்களில் ஆபிமுக்யமும் மற்ற அவச்யமான நற்குணங்களும் வ்யக்தமாயிருக்கின்றன. அவர் சரீராரோக்யத்துடனும் துஷ்டியுடனும் நம்முடைய ராஜதானியைப் பரிபாலித்து நமக்கெல்லோர்க்கும் பேரானந்தத்தை அளிக்க [illegible]மென்று நாம் பகவானைப் ப்ரார்த்[illegible]

**ஸ்ரீ ஶிஷ்ய ஸபையின் அடுத்தமஹாஸங்கம்.**

சென்ற ஸஞ்சிகையில், சிஷ்யஸபையின் மூன்றாவது மஹாஸங்கம் செங்கற்பட்டுஜில்லா மதுராந்தகமென்னும் திவ்யதேசத்தில் கூடப்போகிற தென்பதையும் அது விஷயமாய் ஸ்ரீ மதுராந்தகத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்வாமிகளில் பலர் அதிக

உத்ஸாஹத்துடனும் ஆஸ்தையுடனும் முயற்சிகள் செய்துவருகிறார்களென்றும் அறிவித்தோம். இவர்களுடைய விருப்பத்துக்கும் முயற்சிக்கும் அநுகுணமாய் அந்த ஸங்கத்தைப் பெருமைப் படுத்துவதற்குப் பர்யாப்தமான ஜ்ஞாநத்தையும் ஸம்ப்ரதாயத்தில் ப்ரத்தையையும் உடைய அக்ராஸநாதிபதி ஒருவர் ஸிஷ்ய ஸபையாரால் தெரிந்தெடுக்கப் பட்டிருக்கிறார் என்பதையும் அறிவிக்கிறோம். திருவள்ளூரில் எழுந்தருளியிருக்கும் டிஸ்த்ரிக்ட்டு ஜட்ஜாகவிருந்து இப்போது பென்ஷன் பெற்றுவரும் டிவான். பஹதூர். ஸ்ரீ மாங். டி. டி. ரங்காசார்யர் ஸ்வாமி இந்த ஸங்கத்துக்கு அக்ராஸநாதிபதியாக விருக்க இசைந்திருக்கிறார். அந்த ஸ்வாமி அக்ராஸநாதிபதித்வத்தை ஏற்றுக்கொண்டது சபையாரின் பாக்யமென்றே நாம் எண்ணுகிறோம். அவருடைய ஜ்ஞாநாதிசயங்களைப்பற்றி விஸ்தரிப்பதற்கு பிந்தி நடக்கப் போகிற ஸதஸ்ஸே தகுந்த இடமாகையாலும், அங்கு அவருபந்யாஸத்தைக் கேட்டு ஆநந்திக்கப் போகிற ஸதஸ்யர்களே சரியான அதிகாரிகளாகையாலும் அந்தவிஷயத்தில் நாம் சொல்லவேண்டிய தொன்றுமில்லை. விசேஷமாய் ஸ்ரீ வைஷ்ணவ ஸ்வாமிகள் சேர்ந்துவந்து ஸபையை அலங்கரிப்பார்கள் என்றும், ஸ்ரீ. உபய. ரெங்காசார்யர் ஸ்வாமியின் ப்ரவர்த்தநத்தையும் நியமநத்தையும் ஸதஸ்யர்கள் நன்குமதித்து அவர் வசநங்களால் ஆஹ்லாத மடைவார்களென்றும் நாம் நம்புகிறோம். ஸ்ரீ. உபய வேதாந்த ப்ரவர்த்தகர்களான திருக்கோட்டியூர் ஸௌம்ய நாராயணாசார்யர், கபிஸ்தலம் தேசிகாசார்யர், சேட்லூர் நரஸிஹ்மாசார்யர், புத்தங்கோட்டகம் ஸ்ரீநிவாஸாசார்யர், ராயம்பேட்டை க்ருஷ்ணமாசார்யர் முதலான பல வித்வான்கள் ஸபைக்கு எழுந்தருளுவதாயும் ஒவ்வொரு விஷயத்தில் உபந்யாஸம் செய்வதாயும் அப்யுபகமம் செய்திருக்கிறார்கள். அடுத்த மார்கழிமீ 11-ம் தேதிக்குச்சரியான டிஸம்பர்மீ 25 - ம் தேதியிலும் அதற்கடுத்த இரண்டு தினங்களிலும் இந்த மஹாஸங்கம் சேருவதாய் ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன. உபந்யாஸங்களின் விபரங்களும் மற்ற ஸங்கத்தின் ஸம்பந்தமான அறிக்கைகளும் ஸபையின் அதிகாரிகளால் க்ரமமாய் முந்தி ஸ்வாமிகளுக்கு அறிவிக்கப்படும். இடையூறின்றி ஸதஸ் சேர்ந்து உத்தேசித்திருக்கிற உபந்யாஸங்களும் மற்ற கார்யங்களும் த்ருப்தியாய் நடந்துவர வேண்டுமென்பதற்கு ஸர்வ நியந்தாவான ஸ்ரீலக்ஷ்

மீந்ருஸிஂஹமன் கருணையே ஸாதகமாகையால் அதையே நாம் நம்பியிருக்கிறோம்.

**ஸ்ரீ அழகிய சிங்கருக்கு ஓர் விஜ்ஞாபநம்.**

அடுத்த ஸங்கத்திலும் முன் ஸங்கங்களில்போல் ஸ்ரீ சிஷ்ய ஸபையார் ஸ்ரீ ஸந்நிதியின் வ்ருத்தியைக்குறித்துப் பலவிதமான ஆலோசனைகள் செய்து தங்களுக்குத்தோன்றும் விஷயங்களைத் தீர்மானங்களாகச்சேர்த்து ஸ்ரீ அழகியசிங்கர் ஸந்நிதியில் விஜ்ஞாபநம் செய்வார்களென்பதற்கு ஸந்தேஹமில்லை. இப்படிச் செய்யும் விஜ்ஞாபநங்கள் ஸ்ரீ அழகிய சிங்கர்கள் திருவடிகளில் ஆச்ரயித்த, ஸ்ரீ ஸந்நிதியின் பெருமையில் ஆஸ்தை யுள்ளவர்களான ஸ்ரீ வைஷ்ணவர்களாலேயே செய்யப்படுகிறதென்றும் நிச்சயமாய்ச் சொல்லலாம். பெரிய கூட்டத்தாராகிய ஸந்நிதி சிஷ்யர்களின் ஆசார்யரான ஸ்ரீ அழகிய சிங்கர் அந்த விஜ்ஞாபநங்களை ஹிதபுத்தியால் செய்யப்பட்டனவென்று திருவுள்ளம் பற்றுவதே உசிதம். ஸபையார் இதுவரையிலும் செய்துவந்த தீர்மாநங்கள் எல்லாம் ஸ்ரீ ஸந்நிதியின் வைபவத்துக்குக் குறைவு வராமலிருக்க வேணுமென்கிற எண்ணத்துடன் செய்யப்பட்டவைகளே யொழிய ஸ்ரீ அழகியசிங்கர் ஆஜ்ஞையை அதிலங்கநம் பண்ணவேணுமென்றாவது வேறுவிதமாய் ஸ்ரீ அழகிய சிங்கர் திருவடிகளில் அபசாரப் படவேணுமென்றாவது செய்யப்பட்ட தீர்மானங்களல்ல. இந்தத் தீர்மானங்களில் முக்யமானவை எவை என்று கொஞ்சம் விசாரிப்போம். அநுஸ்யூதமாய் முன் இரண்டு ஸங்கங்களிலும் வேதாந்த தீபிகையில் பலவிடங்களிலும் சலிக்காமல் சொல்லிவந்த விஷயம் ஒன்றுண்டு. அதாவது, ஸ்ரீ ஸந்நிதியில் வரவுசெலவு கணக்குகளையும் மற்ற ஸந்நிதிகார்யங்களையும் நன்றாய்ப் பார்த்துவரத் தகுந்த சம்பளத்தில் ஓர் மானேஜர் என்னும் ஸ்ரீ கார்யக்காரர் வேண்டுமென்று விஜ்ஞாபநம் செய்துவரப்பட்டது. இதில் என்ன அநௌசித்யம்? வருஷத்தில் லட்சரூபாய்வரையில் வரும்படிவரக் கூடியதாயும் பல தேவஸ்தான விசாரணைகளை உள்ளடக்கினதாயுமிருக்கிற ஸ்ரீ ஸந்நிதியில் 100 ரூபாய் வரையில் மாஸச் சம்பளம் கொடுத்துத் தகுந்த ஒரு உத்யோகஸ்தர் நியமிக்கப்பட்டால், அவருடைய ஸமர்த்தமான விசாரணையால் அவர் சம்பளம் அளவுக்கு லாபம சேர்க்கப்படுவதுடன் மேற்கொண்டு விசேஷ க்ஷேமத்துக்கும் இட

மூண்டென்றே பல ஸந்நிதி சிஷ்யர்களின் நம்பிக்கை. ஒருகால் மேற்சொன்ன சம்பளம் இப்போது கொடுப்பது ச்ரமப்படுமாறு லும் 50 ரூபா யாவது கொடுத்துத்தகுந்த ஒருவர் நியமிக்கப்பட வேண்டியது மிகவும் அவச்யமென்றே சொல்லவேண்டும். இப்போது ஸந்நிதியில் வேலைபார்த்துவரும் ஸ்ரீ. குப்புஸ்வாமி ஐயங்கார் மடத்தைச்சேர்ந்த க்ராம கார்யங்கள், கோர்ட்டுவேலைகள், கட்டட ரிபேர்கள், புதுக்கட்டட நிர்மாணங்கள், தேவஸ்தான கார்யங்கள், ஸ்ரீ அழகியசிங்கருடன்கூட இருந்து ஸ்ரீ கார்யத்தை நிர்வஹித்து அந்தரங்க ஸேவகராயிருத்தல் ஆகிய பலவேலைகளையும் ஒருவராகவே பார்த்துவருகிறார் என்று தெரிகிறது. இது இவ்வளவு பெரிய ஆஸ்தாநத்துக்கு உசிதமா? வ்யயத்தை ஸங்கோசம் செய்வதாலேயே ஏதோ ஸ்ரீ ஸந்நிதிகார்யங்கள் நடந்து வருகின்றனவென்பதிருக்கட்டும். க்ரமமாய் வரக்கூடியதும் கொஞ்சம் முயற்சியால் கிடைக்கக்கூடியதுமான வரும்படிகள் சரிவர கிடைக்காமற் போனால் ஸ்ரீ ஸந்நிதியின் செலவுகளெல்லாம் முன் காலத்தில் சேகரிக்கப்பட்ட த்ரவ்யத்தைக்கொண்டே நடந்தேறி வரவேணும். மேன்மேல் வரும்படிகள் வராமலிருந்தால் செலவுகளுக்கும் தட்டு உண்டாகிவரும். ஆனால் ஸ்ரீ ஸந்நிதி சிஷ்யர்கள் வரவுசெலவு விஷயத்தில் விசாரம் செய்வானேன்? ஸந்நிதி ஆராதநங்களும் ஆச்ர்யகத்துக்கு எடுத்ததான ஸமாச்ரயணங்களும் நடந்துவரவில்லையாவென்று கேட்கலாம். இது விஷயத்தில் ஸ்ரீ பிள்ளைபாக்கம் அழகிய சிங்கருடையவும் திருக்குடந்தை அழகிய சிங்கருடையவும் அநுஷ்டாநங்களே உசிதமான ப்ரத்யுத்தரம். இந்த இரண்டு அழகிய சிங்கர்கள் காலங்களிலும் திநந்தோறும் அழகிய சிங்கர் முன்னிலையில் கணக்குகள் படிக்கப்பட்டுவந்தது எல்லோர்க்கும் ப்ரஸித்தம். இந்த க்ரமம் அநுசிதமாயிருந்தாலும் அழகிய சிங்கர் ஆஸ்தாநத்திற்கு அநர்ஹமாயிருந்தாலும் அவர்கள் நடத்தி இருக்கமாட்டார்கள். அந்த ஸம்ப்ரதாயம் இப்போதும் நின்றுவிடாமல் நடந்துவந்தால் அது சிஷ்யர்களுக்கு த்ருப்தியை உண்டாக்கும். தெய்வாதீனமாய் ஸ்ரீ அழகியசிங்கர் திருமேனியின் அசக்தியால் ஏற்படும் ஆராதனாதி ஸங்கோச விஷயங்களில் சிஷ்யர்களுக்கு வருத்தமில்லை. ஸ்ரீ அழகியசிங்கர் திருவுள்ளமிருந்தால் நிவார்யமான அம்சங்களில், ஸபையார்கள் வருஷாந்த ஸங்க தீர்மானங்களால் செய்துவரும் விஜ்ஞாபநங்களை ஸ்ரீ அழகிய

சிங்கர் அநாதரிக்காமல் தகுந்த ஏற்பாடுகளை உசிதப்படி செய்ய நியமித்தால் அது எல்லாசிஷ்யர்களுக்கும் ஸந்தோஷத்தை உண்டு பண்ணும். அப்படிப்பட்ட விஷயங்கள் எவையென்றால், முதலாவது, இந்த ஸபையின் உத்தேசங்களை அநுமோதித்து ஸ்ரீ அழகிய சிங்கர் அதற்குப் போஷகராய் எழுந்தருளி இருந்து அநுக்ரஹிக்க வேணும் என்பது. இரண்டாவது, ஸ்ரீ ஸந்நிதியிலும், பெருமாள் கோவில், திருநாராயணபுரம் திருக்குடந்தை முதலான ப்ரஸித்த வைஷ்ணவஸ்தலங்களில் ஏற்பட்டிருக்கும் ஸந்நிதிக் கட்டடங்களிலும் தகுந்த வித்வான்களை ஏற்படுத்தி ஸம்பரதாயப்ரவசனம் செய்வித்துவந்தால் மிகவும் அழகாயிருக்கும் என்பது. இந்த விஷயங்களில் ஸ்ரீ அழகியசிங்கருக்குத் திருவுள்ள முண்டாகாம விருப்பது சிஷ்யர்களின் தௌர்ப்பாக்யந்தான். வெண்ணாற்றங்கரையில் நடந்த ஸதஸ்ஸுக்கு ஸ்ரீ அழகிய சிங்கர் நியமநத்தின்பேரில் வந்த சிலர், அவ்விடத்தில் நடந்த விஷயங்களை நேரில் விஜ்ஞாபநம் செய்திருப்பார்கள். அவைகளில் ஸ்ரீ அழகியசிங்கருக்காவது மடத்துக்காவது ப்ரதிகூலங்களாய் ஒன்றுமில்லை. பிறகு நீடாமங்கலம் ஸதஸ்ஸில் நடந்தவிஷயங்களிலும் ஸ்ரீ அழகியசிங்கர் திருவடிகளில் அபசாரவஹமான விஷயங்கள் ஒன்றுமில்லை. இது போலவே அடுத்த மதுராந்தக ஸங்கத்திலும் சேரப்போகிற ஸபையார் முன்போல் ஸர்வஸம்மதமான விஷயங்களில விஜ்ஞாபநங்களைச் செய்வார்களே ஒழிய அநுசிதமான விஜ்ஞாபநங்கள் செய்யமாட்டார்கள். இதை ஸ்ரீ அழகியசிங்கர் திருவுள்ளத்தில்வைத்து அந்த ஸதஸ்ஸுக்கு தன் ஸ்தாநத்துக்கும் கௌரவத்துக்கும் அர்ஹமான ஒரு வித்வானை தன் ப்ரதிநிதியாய் அனுப்பத் திருவுள்ளப்பட்டால், அந்த ஸ்வாமியை ஸ்ரீ அழகிய சிங்கராகவே எண்ணி சிஷ்ய ஸபையார் ஆநந்த மடைவார்கள். அப்படிச்செய்தால் ஸபையாருடைய விசாரங்களும் கார்யங்களும் விஜ்ஞாபநங்களும் எப்படிப் பட்டவைகளென்றும் ஸ்ரீ அழகிய சிங்கருக்கு நன்றாய்த் தெரியக்கூடும்.

ஸந்நிதி ஶிஷ்யர்கள்.

ஸ்ரீ ஶிஷ்ய ஸபைக்குப் பிரிவுகள் ஏற்பட்டிருக்கும் இடங்களிலும் பிரிவுகள் ஏற்படாத ஸந்நிதி ஶிஷ்யர்களடங்கிய க்ராமங்களிலும் மற்ற இடங்களிலும் கார்யதர்சிகளுடையவும் மற்றைய அங்கத்தினர்களுடையவும் முயற்சியால் அடுத்த மஹாஸங்கங்க விஷயமாய் பூர்

வாங்கமான ஸங்கங்கள் சேர்க்கப்பட்டு வருமென்று நம்புகிறோம். மஹா ஸங்கத்துக்கு எழுந்தருளக்கூடிய ஸ்வாமிகளை நிர்ணயம் செய்யவேண்டியது அவசியமானதால், அதுவிஷயத்தில் இந்த ஸபையாரின் முயற்சியை ஸபலமாக்க எல்லா ஸந்நிதி ஶிஷ்யர்களும் அநுகூலிக்க வேண்டுமென்று ப்ரார்த்திக்கிறோம். எத்தனை பேர்களை ப்ரதி நிதிகளாய் நியமித்து மதுராந்தகத்துக்கு அனுப்பினாலும் அவர்கள் தங்கி ஸதஸ்ஸை அநுக்ரஹித்துப் போகும்வரையில் அவர்களுக்குத் தகுந்த ஏற்பாடுகள் நடத்தப்படுமென்பதில் ஸந்தேகமில்லை. ஸந்நிதி ஶிஷ்யர்கள் விசேஷமாய் இந்த ஸபையாரின் முயற்சியை அங்கீகரிக்கிறார்களென்கிற நம்பிக்கைதான் இவர்களுடைய ப்ரயத்நங்களுக்கு முக்யகாரணம். அந்த அங்கீகாரம் ஶிஷ்யர்கள் நேரில்வந்து ஸதஸ்ஸில் தங்கள் தங்கள் அபிப்ராயத்தை தெரிவிப்பதனாலேயே வெளியாகவேணும். ஏதோ ஸ்ரீ அழகிய சிங்கருக்கு விருத்தமான வ்யாபாரங்களைச் சிஷ்ய ஸபையார் நடத்துகிறார்கள் என்கிற ப்ரமமெல்லாம் இப்போது ப்ராயேண தெளிந்திருக்குமென்று நம்புகிறோம். ஆகையால் எல்லா ஸந்நிதி சிஷ்யர்களும் நேரிலாவது, தாங்கள் கூட்டம் சேர்ந்து ப்ரதிநிதிகளை அனுப்பியாவது ஸ்ரீ மதுராந்தகத்தில் நடக்கப்போகிற மூன்றாவது மஹாஸங்கத்துக்குவந்து அங்கே நடக்கும் கார்யங்களில் அந்வயிக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம். அப்படியே ஸந்நிதி சிஷ்யர்களல்லாத ஸ்ரீ வைஷ்ணவர்களும், ஸ்ரீ பகவான் ராமாநுஜன், ஸ்ரீ வேதாந்த தேசிகன் முதலான ஆசார்யர்களின் ஸ்ரீ ஸூக்திகளை அவலம்பித்த உபந்யாஸங்களோ நடக்கப்போகிறபடியால் எல்லோரும் அவைகளைக் கேட்டும் வேறுவிதமாய் அவைகளில் அந்வயித்தும் ஆநந்தித்துப்போக இடமுண்டு. ஆகையால் அடுத்த மஹாஸங்கத்துக்கு எல்லோரும் எழுந்தருளவேண்டுமென்று இதனால் ப்ரார்த்திக்கப் படுகிறது.

இன்னும் ஒரு விஷயத்தைச் சொல்லி இந்தக் குறிப்புகளை முடிக்கிறோம். தற்காலம் ஸ்ரீ அழகியசிங்கர் த்ருடகாத்ரராய் எழுந்தருளி இருப்பதால், பிறகு அந்த ஸ்தாநத்தில் யார் ஏற்படவேண்டுமென்னும் விஷயத்தில் சிஷ்ய ஸபையாருக்கு ஒரு வ்யக்தியைப்பற்றியும் யாதொரு ஆக்ரஹமு மில்லையென்பதை எல்லா ஸந்நிதி சிஷ்யர்களும் அறியவேண்டும். ஸ்தாநத்தின் கௌரவத்துக்கு அநுரூபமான குணங்கள் இரண்டொரு ஸ்வாமிகளிடம் தான்

பூர்ணமாய் இருக்கின்றனவென்பது ஸ்ரீ அழகிய சிங்கருக்கும் ஸந்நிதி சிஷ்யர்களுக்கும் மனதில் நன்ருய்த் தெரியும். அது விஷயமான சர்ச்சைகள் அநாவசியமான பேதத்தை உண்டு பண்ணுமானதினுல் ஏகமுகமாய் எல்லாரும் அபிப்ராயப்பட்டாலொழிய ஓரு ஸ்வாமியையும் உத்தேசித்து இப்போது அபிப்ராயம் கொடுப்பது சரியல்ல. இந்த எண்ணத்தினுல் தான் நீடாமங்கலம் ஸங்கத்தில் இது விஷயத்தில் ஒரு தீர்மானமும் புதிதாய் ஏற்படவில்லை. ஏற்கெனவே வெண்ணாற்றங்கரையில் ஏற்பட்ட தீர்மானத்தைவிட வேறு விசேஷித்துச் செய்யக்கூடிய நிர்ணயத்துக்கு இப்போதும் ஸமயம் ஏற்படவில்லையென்று தோன்றுகிறது. இந்த விஷயத்தில் மதுராந்தகத்தில் சேரும் ஸந்நிதி ஶிஷ்யர்கள் விவாதமில்லாமல் இருப்பது உசிதம்.

**ஸ்ரீ அஹோபிலம்.**

இந்த ஸஞ்சிகையில் ஸ்ரீ அஹோபில யாத்ரை விஷயமாய் ஓர் பக்தர் நமக்கு அனுப்பியிருக்கும் கடிதம் அச்சிடப்பட்டிருக்கிறது. நம்முடைய ஸம்பரதாயத்துக்கு மூலஸ்தானமான அஹோபிலத்தில் கீழ் ஸந்நிதியிலும் மேல் ஸந்நிதியிலும் பழுதுபார்க்கவும் புதுப்பிக்கவும் வேண்டியதான பாகங்கள் அநேகம் இருக்கின்றனவென்பது இந்த ஸஞ்சிகையில் அச்சிடப்பட்டிருக்கும் படங்களால் வ்யக்தமாய்த் தெரியும். ஸ்ரீ அஹோபிலத்துக்கு ஸமீபத்திலும் இதர ஸ்தலங்களிலும் இருக்கும் உபயந்நர்களான ஸந்நிதி சிஷ்யர்கள் இந்த விஷயத்தில் ப்ரேரத்தை வைத்தால் க்ரமமாய் வேலைகள் ஸ்ரீ அழகிய சிங்கரின் நியமநத்தின்பேரில் நடத்திவிடலாம். இது போன்ற பலவிடங்களில் கட்டட நிர்மாணங்கள் அவசியமாயிருந்தாலும் மற்ற வேலைகளைப்பார்க்கிலும் இது அத்யந்தம் ப்ரதானமென்பது நாம் சொல்லவேண்டியது இல்லை. இந்த விஷயத்தில் ஶிஷ்யஸபையார் அடுத்த ஸங்கத்தில தகுந்தவிசாரம் செய்து ஸ்ரீ அழகிய சிங்கரிடத்தில் விஜ்ஞாபநம் செய்யவோ அல்லது வேறு ஏற்பாடு செய்யவோ தகுந்தபடி உத்யோகிப்பார்களென்று நம்புகிறோம்.

## விளம்பரம்.

# பட்டு பீதாம்பர கம்பெனி, காசி.

திருப்தியில்லாதவைகளைத் திரும்பப் பெற்றுக்கொள்வோம்.

### வெண்பட்டு வேஷ்டிகள்.

சுத்தமான வெண்பட்டு வேஷ்டிகள் சிவப்பு சன்னக்கம்பி பட்டைக்கரை ருத்திராக்ஷக்கரை போட்டவை கீழ்கண்ட விலைகளுக்குக் கிடைக்கும்.

| நீளம் | முழம் | அகலம் | | விலை ரூபா. | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 5 | ,, | $2\frac{1}{2}$ | ,, | 6 முதல் | | 8 | வரை |
| 5 | ,, | 3 | ,, | 7 | ,, | 9 | ,, |
| 6 | ,, | $2\frac{1}{2}$ | ,, | 8 | ,, | 9 | ,, |
| 6 | ,, | 3 | ,, | 9 | ,, | 12 | ,, |
| 7 | ,, | 3 | ,, | 10 | ,, | 13 | ,, |
| 8 | ,, | 3 | ,, | 12 | ,, | 15 | ,, |
| 9 | ,, | 3 | ,, | 14 | ,, | 16 | ,, |
| 10-12 | ,, | 3 | ,, | 15 | ,, | 20 | ,, |
| 15-16-18 | ,, | $2\frac{1}{2}$-3, சேலைகள் | | | | | |

நயம் விலை ரூபா. 20 முதல் 30 வரை.

இந்த வேஷ்டிகள், ஜரிகைக்கரை போட்டும் கிடைக்கும். உடல் சிவப்பு, ரோஸ், ஊதா, நீலம், மேகவர்ணம், காஷாயநிறம் இன்னமும் வேண்டிய நிறங்களிலும் கிடைக்கும்.

### பீதாம்பரப் பட்டுச்சேலைகள்.

16-முழம் நீளம் $2\frac{1}{2}$ - அகலம் விளிம்பு முந்தி ஜரிகை வேலைகள் உடல் சாதா. சகல நிறங்களிலும் சேலைகள் கிடைக்கும். நயம் சேலை 1-க்கு ரூ 30-முதல் 200-வரை. மட்டம் சேலைகள் ரூ. 20 முதல் 30-வரை. ஷை சேலைகள் உடலிலும் ஜரிகைப்பூபுட்டா போட்டது. நயம் ரூ. 35-முதல் 300-வரை. மட்டம் ரூ. 25-முதல் 30 - வரை.

### ரவிக்கைகள்.

ரவிக்கைகள் விளிம்பு முந்தி ஜரிகைவேலைசெய்ததும், உடலிலும் ஜரிகை பூக்கள்போட்டதும். ரவிக்கை 1-க்கு ரூ. 2-முதல் ரூ. 15-வரை கிடைக்கும்.

### பட்டுதுப்பட்டாக்கள்.

6-முதல் நீளம், $2\frac{1}{2}$-முதல் அகலம்; விளிம்பு முந்தி ஜரிகை வேலைகளும் உடலில் ஜரிகை பூக்கள்போட்டது. மட்டம் ரூ. 7 - முதல் 15 - வரை. நயம் 15-முதல் 50 - வரை.

### காஷ்மீர் சால்வைகள்.

கம்பளி (Woollen) காஷ்மீர் சால்வைகள் 6-முழம் நீளம், $2\frac{1}{2}$- அகலம். விளிம்பு முந்தி ஜரிகை வேலைகள், மூலையில் மாங்காய்போட்டது. மட்டம் ரூ. 9-முதல் 15-வரை. நயம் 15-முதல் 100-வரை.

சகல பட்டு பீதாம்பர காட்லாகு இனாமாக அனுப்பப்படும்.

விலாசம் :—மானேஜர்.

பட்டு பீதாம்பர கம்பெனி, காசி.

# பகவத்கீதை தமிழ் மொழிபெயர்ப்பு.

## இதில் அடங்கியவை

ராமாநுஜபாஷ்யம், தேசிகன் தாத்பர்ய சந்த்ரிகை, ஆளவந்தார் கீதார்த்த ஸங்க்ரஹ ப்ரகாசம், தேசிகன் கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை, தேசிகன் கீதார்த்த ஸங்க்ரஹப் பாட்டு.

இதுவரையிலும் மொழிபெயர்க்கப்படாதவை.

1, 2, 3, 4, 5 ஸஞ்சிகைகள் வெளியாகியிருக்கின்றன.

| | | | |
|---|---|---|---|
| ராயல் 8 பாரமுள்ள ஸஞ்சிகை | 0 | 6 | 0 |
| தபால்கூலி வி. பி. சார்ஜ் உள்பட | 0 | 8 | 0 |
| வருஷச் சந்தா (12 - ஸஞ்சிகை) | 4 | 0 | 0 |
| தபால்கூலி உள்பட | 4 | 12 | 0 |

சிந்தாத்ரிபேட்டை ஸத் ஸம்ப்ரதாய வர்த்தநீ,

31 - அக்ரஹாரம் சிந்தாத்ரிபேட்டை, சென்னை.

---

ஸ்ரீ:.

## வேதாந்த தீபிகை ஆபீஸில் கிடைக்கும் புஸ்தகங்கள்

| | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|
| 1. ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹம்—(ஸ்ரீ. இஞ்சிமேடு - ரங்கநாதாசார்யருடைய தமிழ் வ்யாக்யாநத்துடன்) ... ... | 0 | 2 | 0 |
| 2. ஸ்ரீ த்ராவிடவேத தாத்பர்யம்—(ஸ்ரீ. எஸ். கோபால ஸ்வாமி ஐயங்காரால் எழுதப்பட்டுள்ளது) ... ... | 0 | 2 | 0 |
| 3. ஸ்ரீ அஹோபிலமடமும், அதன் பீடாதிபதிகளின் (ஸிஷ்யர்களின்) கர்த்தவ்யங்களும்:—(ஸ்ரீ. டி. ராஜகோபாலாசார்யரால் செய்யப்பட்ட உபந்யாஸம்) ... ... ... ... ... | 0 | 2 | 0 |

இவை வேண்டியவர்கள் சென்னை, மயிலாப்பூர், கேசவப்பெருமாள் ஸந்நிதிவீதியில் இருக்கும் ஸ்ரீ வேதாந்த தீபிகை மானேஜருக்கு எழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

---

Printed for the General Secretary, A. M. S. Sabha,
by W. Pushparatha Chetty & Co., K B Press, Madras.

உ

திருப்பெருந்துறையென்பது

தமிழ்நாட்டு

# ஆளுடையார்கோவிலே.



இது:

புதுக்கோட்டைக்காலேஜ்

பிரின்ஸ்பாலாகவிருந்த

எஸ். இராதாகிருஷ்ணயரால்

எழுதப்பெற்று,

மதுரை:

தமிழ்ச்சங்கம்பவர்ப்பிரஸ்ஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

1915.

# முன்னுரை.



பன்னிரண்டு பதின்மூன்று நூல்களும் பல சாசனங்களும் திருப்பெருந்துறை என்னும் ஸ்தலம் ஆவுடையார்கோவிலேயென்று ஒரேவாக்காக உள்ளங்கைநெல்லிக்கனிபோற் காண்பிக்கின்றனவென்றும், இவ்விஷயத்தை மறுப்பவர்களின் உரைகள் சரியான ஆக்ஷேபங்கள் ஆகாவென்றும் இப்புத்தகத்திற் காட்டியிருக்கிறேன்.

பெருந்துறையைப்பற்றிப்பேசும்பொழுது ஒரு பெருந்தவறு பலராற் செய்யப்படுகிறது. மாணிக்கவாசகர் குதிரை வாங்கப் புறப்பட்டாரென்றும், அவர் திருப்பெருந்துறையில் தங்கியிருந்தாரென்றும் தெரிந்துகொண்டிருப்பவர்களிற் பலர், திருப்பெருந்துறை ஒரு கடற்றுறைப்பட்டினமென்றும், மாணிக்கவாசகர் அவ்வூரைநோக்கியே புறப்பட்டார் என்றும் நினைக்கிறார்கள். இது ஒரு பெருந்தவறு என்று விஸ்தாரமாக இப்புத்தகத்திற் காட்டியிருக்கிறது. கீழ்சமுத்திரக்கரையைநோக்கி அவர் புறப்பட்டார் என்றும், நடுவழியில் "பெருந்துறையடைந்தபோதே" சிவன்செயலாற் "செயல்வேறுபட்டு"த் தாம் போகவேண்டிய "பாதையிருப்பதறியாமல்" "திசைப்பூடுமிதித்தவர்போல்"மயங்கி அங்கேயே தங்கிவிட்டார் என்றும் அறிகிறோம்.

எஸ். இராதாகிருஷ்ணன்.

# திருப்பெருந்துறையென்பது தமிழ்நாட்டு ஆளுடையார்கோவிலே.*



சென்ற புரட்டாசிமாதத்துச் செந்தமிழ்ப்பத்திரிகையில் "மாணிக்கவாசகர்கால ஆராய்ச்சி" என்ற தலைப்பின்கீழ் மகா-ள-ள-ஸ்ரீ கே. ஜி. சேஷையரவர்கள் திருப்பெருந்துறைத்தலம் மலைநாடாகிய "மலையாளநாட்டில் இருக்கவேண்டுமென்று நினைக்கிறேன்" என்று கூறியிருக்கிறார்கள். இவ்வுரை உண்மைக்குமாறுபாடுள்ளதென்று தோன்றி நான் எனக்குத்தெரிந்ததை எழுதலானேன்.

I. (1) இவ்வூர் மிழலைநாட்டில் இருந்ததென்று யாவரும் ஒப்புக்கொள்வார்களென்று எண்ணுகிறேன். மாணிக்கவாசகர் எத்திக்கினின்று மதுரைக்குத் திரும்பிவந்தனரோ அத்திக்கினின்று குதிரைகள் வந்தனவாகும். அத்திக்குத்தான் பெருந்துறையுள்ள திக்கு. மிழலைநாட்டுநரிகள் குதிரைகளாகமாற்றப்பட்டு அவை மிழலைநாட்டினின்று மதுரைக்குவந்தன.

"ஒழுக்கந் தருமந் தவந்தான முறவு வாய்மை பொறைமற்றும்
விழுப்ப முள்ள சூத்திரர்வாழ் மிழலை நாட்டு நரியெல்லா
மழைத்துத் தெருட்டி விளையாட லவனி மீது நனிவிளங்கத்
தழைத்த தலத்தை நரிக்குடியென் றின்றுஞ் சொல்வர் சான்றோரே"

என்று தில்லைநம்பி தம்முடைய திருவிளையாடற்புராணத்திற்கூறியிருப்பதைப்பார்க்க. குதிரைகள் மிழலைநாட்டினின்றுவந்தனவாகையால், திருப்பெருந்துறை மிழலைநாட்டிலிருந்தது என்பது சித்தம். மாணிக்கவாசகர் கொச்சிநாட்டுக்குப்போய் அப்பக்கத்திற் குதிரை வாங்குவதாகக்கூறி அவ்விடத்தினின்று மதுரைக்குத் திரும்பிவந்திருந்தாற் கொச்சிநாட்டுநரிகளல்லவோ பரிகளாக மாற்றப்பட்டிருக்க வேண்டும். இப்பாக்கியத்தை அந்நாட்டுநரிகள் அடையவில்லையே

* ஆவுடையார்கோவில் என்பதும் இதுதான். "ஆளுடையார்கோவில்" என்பது, பாஷாவிசாரம்செய்பவர்கள் "சோம்பேறித்தனவிதி" என்றுகூறும் வழியினாற் காலக்கிரமத்தில் "ஆவுடையார்கோவில்" என்று மாறியிருக்கலாம் "ஆவுடையார்" என்பதைப் "பசுவையுடையபதி" அல்லது "ஆளுடைய நாயகன்" என்று கொள்ளலாமா?

(2) இம்மிழலைநாடு எங்கிருந்தது?

1910—11-ஆம் வருஷத்திய சென்னைராஜதானிக்கல்வெட்டு இலாகாவின் "ரிப்போர்ட்டில்" 1910-ஆம் வருஷத்து 47-ஆம் சிலா சாசனமென்று குறித்திருக்கும் கல்வெட்டின்படி இந்நாடு விருதராஜ பயங்கரவளநாட்டின் ஒருபாகம் என்று அறியலாம்.

தேர்க்காட்டூர் என்ற ஊரிலுள்ள பழையவேளார்குடி ஒன்றைச் சேர்ந்த வேளார் ஒருவரது "கானநாட்டுவிருத்தாந்தம்" என்ற கையெழுத்துச்சுவடியின்படியும், மற்றுள்ள பழைய ஏடுகளின்படியும்,

i. தெற்கேயுள்ள பாண்டிநாட்டிற்கும் வடக்கேயுள்ள புனல் *நாட்டிற்கும் இடையிலுள்ள பன்றிநாடு(மற்றி நநாடுகளின் சில பாகங்களுடன்) கோனாடு, கானாடு என இருபெரும்பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்ததென்றும்,

ii. கோனாடு சோழவந்தான்வரை பரவியிருந்ததென்றும்,

iii. கானநாடு, தொண்டி காளையார்கோவில்வரை எட்டியிருந்த தென்றும்,

iv. இவற்றின்பிரிவெல்லை புதுக்கோட்டைக்கு நான்குமைலுக்குத்தெற்கேயோடும வெள்ளாறென்றுகொள்ளலாம் என்றும்,

v. கோனாடு, உறையூர்க்கூற்றம ஒலலையூர்க்கூற்றம் † (புதுக்கோட்டைக்குமேற்கிலுள்ள ஒலியமங்கலத்தைக்கொண்டது) உறத்தூர்க்கூற்றம் (இது புதுக்கோட்டைராஜ்யத்தின்வடமேற்குப்பாகத்திலுள்ள பழையகொடும்பாளூரைக்கொண்டது) என மூன்றுகூற்றங்களாகப் பிரிந்திருந்ததென்றும்,

vi. கானநாடு ஏழுகூற்றங்களாகப்பிரிந்திருந்ததென்றும்,

vii. அவற்றுள், மிழலைக்கூற்றம் ஒன்று என்றும் விளங்கும்.

---

* பாண்டிநாடு, புனல்நாடு, பன்றிநாடு என்றபெயர்கள் தேர்க்காட்டூர்க் கையெழுத்துப்பிரதியிலில்லை. பன்றிநாடு என்பது வராகமலையெனப்படும் பன்றிமலை அல்லது பழனிமலையுள்ளநாடு, அல்லது பன்றிக்குறும்பர்பன்னிருவர் இருந்துவந்தநாடு. தில்லைநம்பியின் திருவிளையாடற்புராணம், 59 ம் திருவிளையாட்டைப்பார்க்க. பழனி என்பது பன்றியென்பதன்விகாரம் என்பர்.

† இக்கூற்றத்திலுள்ள ஒல்லையூரைவர்ணிக்கும் புறநானூற்று 242 ம் பாட்டை மகா-ள-ள-ஸ்ரீ சேஷையரவர்கள் நன்குக அறிந்தவர், அதை அழகாக ஆங்கிலத்தில் அவர் மொழிபெயர்த்திருக்கிறாராதலால்.

மேற்கூறிய் கானநாட்டின் ஒருபெரியபாகத்திற்கு ஏறக்குறைய 800 வருஷங்களுக்குமுன் "விருதராஜபயங்கர*சோழவளநாடு"என்ற பெயரிடப்பட்டது.

"கானநாடாகிய விருதராஜபயங்கரவளநாடு"† என்னும் சொற்றொடரைக்கொண்ட புதுக்கோட்டைராஜ்யத்தின்சிலாசாசனங்களின் பிரதிகள் 30-க்குக்குறையாமல் என்னிடமிருக்கின்றன.

ஆதலாற், பாண்டியநாட்டிற்கு வடக்கெல்லையெனப்படும் வெள்ளாற்றிற்குத் தென்பாகத்திலுள்ள கானநாட்டின் ஒருபாகந்தான் திருப்பெருந்துறையைக்கொண்ட மிழலைநாடாம்.

(3) மிழலைக்கூற்றத்தின்முக்கியநகர் திருமெய்யத்தலத்திற்கு ஒருமைல்வடக்கிலும் வெள்ளாற்றிற்கு ஆறு அல்லது ஏழுமைல் தெற்கிலும் ஓடித் திருப்புனவாயில் என்னும் சிவஸ்தலத்தின்பக்கத்திற் கடலிற்சேரும் பாம்பாறு என்றுகூறலாம். இந்தமிழலைநாட்டின் பெயரைக்கொண்ட புதுக்கோட்டைராஜ்யத்துச்சிலாசாசனங்களின் பிரதிகள் பத்தொன்பதிற்குக்குறையாமல் என்னிடமிருக்கின்றன. இவற்றுள், சிலகல்வெட்டுக்கள் மிழலைநாட்டுமேல்பாகத்தையும்,வேறு சில மிழலைநாட்டுநடுப்பாகத்தையும் சேர்ந்தவை யென்று பின்வரும் கல்வெட்டுவாக்கியங்களால்விளங்கும்.

1. தாஞ்சூர் (மூன்றுகல்வெட்டுக்கள்) "மிழலை மேல்கூற்று மீபாம்பாற்றுநாடு"

2. காரமங்கலம் (மூன்றுகல்வெட்டுக்கள்) ஷை ஷை

3. வாளரமாணிக்கம் (ஆறுகல்வெட்டுக்கள்) ஷை ஷை

* கலிங்கத்துப்பரணியைப்பார்க்க.

† சென்னைக் கல்வெட்டு இலாகா உத்யோகஸ்தர்களாற் பின்கண்ட இலக்கங்களாகத் தாக்கல்செய்திருக்கும் கல்வெட்டுக்களையும்பார்க்க.

1906-ம் வருஷத்து 388-ம் இலக்கக்கல்வெட்டு.

1907-ம் ,, 162-ம் ,,

ஷை 163-ம் ,,

4. இரும்பாநாடு* புதுக்கோட்டையின் எல்லைப்பாகம் (ஏழுகல்வெட்டுக்கள்) இவற்றுள் ஆறுசிலாசாசனங்களில், 'மிழலைநாட்டு நடுவில்கூற்று'† என்றும், ஏழாவதுகல்வெட்டில் "மிழலைநாட்டு‡ துளம்பூரான" என்றும் கண்டிருக்கிறது.

மேற்கூறிய நான்கு ஊர்களும் ஆளுடையார்கோவில்ஸ்தலத்தைப் போல் புதுக்கோட்டைராஜ்யத்தின்தென்கிழக்கில் உள்ளவை. அவ்வூர்கள் ஆளுடையார்கோவிலினின்று முறையே 12, 9, 8, 4 மைல் தூரத்திலுள்ளவை என்றால்அந்தத்தலத்திற்கு இவை சமீபத்திலேயே இருந்துவந்திருக்கின்றனவென்றும், ஆளுடையார்கோவில் மிழலைக்கூற்றத்தில் இருந்திருக்கவேண்டும் என்றும் எண்ணலாம். மிழலைநாட்டின் "நடுவில்கூற்று" ஆளுடையார்கோவிற்பக்கமும் "மீபாம்பாற்றுக்கூற்று" புதுக்கோட்டைராஜ்யத்தின்பாகமும் ஆகின்றதனால், மிழலைநாடு (புறநானூற்று 24-ஆம்பாட்டினின்று நாம் அறிகிறபடி) கடற்கரைவரைபரவியிருந்ததென்றெண்ணுவதுடன், அதன்கீழ்பாகம் கீழ்பாம்பாற்றுக்கூற்று அல்லது கீழைக்கூற்று என்ற பெயரைத் தாங்கியிருக்கலாம் என்றும் ஊகிக்கலாம். ஆதலால் திருப்பெருந்துறை கீழ்கடற்கரையை அடுத்த ஊரே.

II வடமொழி 'ஹாலாஸ்யமாகாத்மியம்' என்னும் கிரந்தம் திருப்பெருந்துறை கீழ்சமுத்திரக்கரையை அடுத்திருந்ததென்று இரண்டு சுலோகத்திற் சுருக்கமாயும் தெளிவாயும் தெரிவிக்கிறது.

*இது, பாண்டியமண்டலத்தைச்சார்ந்த சுந்தரபாண்டியவளநாட்டின்கண் இருந்தது என்று சிலகல்வெட்டுக்கள்கூறும். மாணிக்கவாசகர் இருந்ததாக மகா-ா-ா-ஸ்ரீ சேஷையரவர்கள்கூறியகாலத்திற்குப் பலநூற்றாண்டுகளுக்குப் பின் இராஜராஜசோழவளநாடு என்றும் இவ்வளநாடு பெயர்பெற்றிருந்தது.

† மிழலைக்கூற்றத்தின் இந்நடுவிற்கூற்று, சென்னைக் கல்வெட்டு இலாகாவின் 1908-ஆம்வருஷத்து 150-ஆம் இலக்கக்கல்வெட்டிற் பேசப்பட்டிருக்கிறது.

‡ மகா-ா-ா-ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமிஐயங்காரவர்கள் தம்முடைய "Ancient India" அல்லது புராதனஇந்தியாவின்படங்களொன்றில் மிழலைநாட்டையாண்ட எவ்வியின்தேசத்தைத் திருநெல்வேலிஜில்லாப்பக்கத்திற்காட்டியிருப்பது எக்காரணத்தினால் என்று விளங்கவில்லை.

"𑌪𑍍𑌰𑌾𑌙𑍍𑌮𑍁𑌖𑌃 𑌪𑍍𑌰𑌯𑌯𑍌 𑌧𑍀𑌮𑌾𑌨𑍍 𑌪𑍍𑌰𑌾𑌕𑍍𑌸𑌮𑍁𑌦𑍍𑌰𑌤𑌟𑌂 𑌪𑍍𑌰𑌤𑌿 ।
𑌬𑌲𑌂 𑌪𑍍𑌰𑌭𑍂𑌤𑌮𑌾𑌦𑌾𑌯 𑌜𑌾𑌤𑌕𑍇𑌤𑌨𑌸𑍇𑌨𑌯𑌾𑌵𑌸𑌮𑌨𑍍𑌵𑌿𑌤𑌃 ॥
𑌤𑌤𑍍𑌰 𑌵𑌿𑌶𑍍𑌰𑌮𑍍𑌯 𑌵𑌿𑌶𑍍𑌰𑌮𑍍𑌯 𑌪𑍍𑌰𑌾𑌪 𑌸𑍇𑌨𑌾𑌮𑌹𑌾𑌵𑌹𑌃 ।
𑌶𑍍𑌰𑍀𑌮𑌹𑌾𑌤𑍀𑌰𑍍𑌥𑌮𑌿𑌤𑍍𑌯𑍇𑌵𑌂 𑌸𑍍𑌥𑌲𑌂 𑌸𑍌𑌖𑍍𑌯𑌾𑌸𑍍𑌪𑌦𑌂 ॥"*

அதாவது (குதிரைவாங்கப்புறப்பட்ட அந்த) "புத்திமான் கிழக்கு முகமாகக் கீழ்சமுத்திரக்கரையை நோக்கிச் சென்றார். கணக்கற்ற பணக்குவியலுடனும் சேனையுடனும் கூடினவராய் ஆங்காங்குச் சிரம பரிஹாரத்திற்காக வழியில் தங்கித்தங்கிப்போன அவர், தனக்குயர் வில்லாத "ஸ்ரீமகாதீர்த்தம்" அல்லது "திருப்பெருந்துறை" [ஸ்ரீமகா தீர்த்தம் = திருப்பெருந்துறை; ஸ்ரீ = திரு; மகா = பெரும்; தீர்த்தம் = நீர்த்துறை.] என்னும் சிவஸ்தலத்தை அடைந்தார்.

இவ்விருசுலோகங்களினின்று திருப்பெருந்துறை மதுரைக்குக் கிழக்குத்திக்கிலேதான் இருக்கிறது என்பது வியக்தமாகவிளங்கு கிறது.

III. மற்றும், மூன்றுசிவஸ்தலங்களைக்குறித்த விடுகதையைப் போன்ற பழமொழியொன்று புதுக்கோட்டைக்குத்தென்கிழக்குப்பாகத் தில்வழங்கிவந்தது. அப்பழமொழி, "கரை குளத்தினின்று ஒருகாதம் துறையினின்று ஒருகாதம்" என்பதுதான். இவ்விடுகதையில் மூன்று ஸ்தலங்கள் குறிக்கப்பட்டிருக்கின்றன. கரை என்பது, அன்னம் முடியைத்தேடுவதாகவும், வராகம் அடியைத்தேடுவதாகவும் செய்யப் பட்ட ஆச்சரியகரமான வேலைப்பாடமைந்த "லிங்கோத்பவர்" விக்ர கத்தைக்கொண்டு முற்காலத்திற் பெயர்பெற்றிருந்த பழங்கரைத்தலம் குளம் என்பது, தேவாரத்திற்கூறப்பட்டுள்ள வைப்புத்தலங்களுள் ஒன்றாகிய வரந்தை என்று சிலர் ஊகிக்கும் பிரசித்திபெற்ற திருவரன் குளம்†. துறை என்பது பிரஸ்தாபத்திலுள்ள திருப்பெருந்துறை

*ஹாலாஸ்யமாஹாத்மியம் 64-ஆம் அத்தியாயம் 42, 43, 44-ஆம் சுலோகங் கள்.

† மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் இத்தலமான்மியத்தைப்பாடஆரம்பித்து நாட்டுப்படலத்துடன் சில அசௌகரியங்களைமுன்னிட்டு நிறுத்திவிட்டார்கள் மகாமகோபாத்தியாயர் பிரும்மஸ்ரீசாமிநாதையரவர்கள் அச்சிட்டிருக்கும் பிள்ளை யவர்களின்பிரபந்தத்திரட்டைப்பார்க்க.

## திருப்பெருந்துறையென்பது தமிழ்நாட்டு ஆளுடையார்கோவிலே

இவ்விடுகதைரூபமாக, பழங்கரை எங்கேயிருக்கிறது? என்று கேட்ட ஒருவருக்கு "(பழங்)கரை(திருவரன்)குளத்தினின்று ஒருகாத தூரத்திலும், (திருப்பெருந்)துறையினின்று ஒருகாததூரத்திலும் உளது" என்று மறுமொழிகொடுக்கப்பட்டதாம். ஆகவே, திருப்பெருந்துறை மற்ற ஆதாரங்களின்படி எவ்விதம் அமையுமோ அவ்விதமே புதுக்கோட்டைக்கு அறக்குறைய 25-மைல்தூரத்திலுள்ள ஸ்தலமென்று ஏற்படுகிறது. அரண்தாங்கி புதுக்கோட்டையினின்று இருபதுமைல் என்று கூறும்பொழுது விடுகதையிற்காட்டியகணக்குத் தவறன்றென்றுவிளங்கும்.

ஆதலால், திருப்பெருந்துறை மிழலைநாட்டு ஊர் என்றும், அந்நாடு தஞ்சாவூர்ஜில்லா ஆளுடையார்கோவிற்பாகத்தை உட்கொண்டதென்றும், ஆதலால் திருப்பெருந்துறை என்னும் ஸதலம், ஆளுடையார்கோவிலே என்றும் கொள்ளல்வேண்டும்.

IV. திருப்பெருந்துறை மேலைச்சமுத்திரக்கரையில் இருந்திராது என்று திருவிளையாடற்புராணத்தினின்று காட்டலாம்.

குதிரைவாங்கப்புறப்பட்ட மாணிக்கவாசகர் எத்திக்கிற்போனார்?

"மேலுறு சாபந் தீர விந்திரன் வெள்ளை யானை
காலைவந் திறைஞ்சுந் தொல்லைக கானையம் பதிய டைந்தார்"*

என்று தில்லைநம்பி கூறியிருக்கிறார். இதிற் சுட்டிக்காட்டியிருக்கும் ஸ்தலம் திருக்கானப்பேர் அல்லது காளையார்கோவிலாம். (அடுத்த பாட்டையும்பார்க்க). இது மதுரைக்குச் சுமார் 40 மைலுக்குக்கிழக்கிலுள்ள ஊர். மேலைச்சமுத்திரக்கரைக்கு மதுரையினின்றுபோகும் ஒருவருக்குக் காளையார்கோவிலில் என்னவேலை இருந்திருக்கக்கூடும். அதிகமாகவளர்ப்பானேன்! வடமொழி ஹாலாஸ்யமாகாத்மியத்திற் கூறியபடி,

"[illegible]"

"அம்மேதாவி கிழக்குமுகமாகக் கீழ்சமுத்திரக்கரையைநோக்கிப் புறப்பட்டார்" என்றே கொள்ளல்வேண்டும்.

---

*திருவாலவாயுடையார்திருவிளையாடற்புராணம் 27-ஆம் திருவிளையாடல் 31-ஆம் பாட்டையும் 32-ஆம் பாட்டையும் பார்க்க.

V. "ஆளுடையார்கோவில்"என்பதற்குப்பொருள் ஆளுடைய நாயகரதுகோவில், அதாவது ஒரு பக்தரை (ஆசிரியவடிவங்கொண்டு) ஆட்கொண்டருளியபெருமானிடம் என்பதாம். இவ்வூருக்கேற்ற இவ்வருமைப்பெயரை விட்டுவிடக்கூடாதென்று தில்லைநம்பி தமது திருவிளையாடற்புராணத்தில், "(பெருந்)துறையாளுடையநாயகன்"* என்று கூறியிருக்கிறார். வடமொழி ஹாலாஸ்யமாகாத்மியத்திலும்

"ஜநவந்நாதர்""ஆள் உடையநாயகன்"

[ஜநம்=ஆள்; ஜநவாந்=ஆளுடையவன்; நாதன்=நாயகன்]
என்று பத்துப்பன்னிரண்டு இடங்களிலும்,

"ஜநவஸ்வாமிநம்" அல்லது "ஆளுடையஸ்வாமியை"†

என்று ஓரிடத்திலும் கூறியிருப்பதைக்காண்க. இவ்வூர் ஸ்வாமியின் மற்றநாமங்களில் அசுவநாதர், உபதேசஸ்தலநாயகர், உபாத்தியாயர், குருந்தவனேசுவரர், முந்நூற்றொருவர் என்ற பெயர்களும் கவனிக்கத் தக்கவை. ஆதலாற் பெருந்துறையென்பதும் ஆளுடையார்கோவில் என்பதும் ஒரு ஊரையேகுறிக்கின்றன என்று கொள்ளலாம்.

VI. கானநாட்டுவிருத்தாந்தத்தைக்கூறும் தேர்க்காட்டூர்க் கையெழுத்துப்பிரதி பழையநூலாகவே‡தோன்றுகிறது.

---

* 28-ஆம் திருவிளையாடலின் 13-ஆம் பாட்டு.

†64ஆம்அத்யாயம் 53ஆம் சுலோகத்தைப்பார்க்க. செப்புப்பட்டயம் முதலியவற்றிற்காணப்படுகிறது என்று மகாமகோபாத்யாயர் பிரும்மஸ்ரீ சாமிநாதையரவர்கள்கூறும் ஆளுடைய (பரமு)ஸ்வாமி என்னும்பெயர் இப்பெயரைச்சார்ந்ததாகக்கொள்ளலாம்.

‡ இது எக்காலத்துநூல் என்று கூறமுடியாது. அதிற்கண்ட கானநாட்டின்பிரிவுகளையோசித்தால் நவீனநூலாக அதைக்கொள்ளுவதுதவறு என்றே விளங்கும். கானநாட்டின்பிரிவுகளைப்பற்றிப்பேசுமிடத்து,

"அன்னமிடு சோமனெனு முக்கிரப் பெருவழுதி அம்புவியில் ஆளும் நாளில்
அரிதான நற்குடி நாற்பத்தெண்ணாயிரம் ஆராய்ந்து தேடிவைத்த
நன்னிலந்தன்னில்—எழுகூற்றம" பதினெட்டுநாடு

"வெ(ற்றி)த்திவாழ்கின்ற திருமிழலைக்கூற்றமிகுந்தமுத்தூர்க்கூற்றம்
பத்தியான அரும்பூர்க்கூற்றம்பாரமான திருக்கானக்கூற்றம்
முத்தமிழ்சேர்தொகுவூர்க்கூற்றம்முதன்மையானகொடுமுளூர்க்கூற்றம்
எத்திசையான இளையான்குடிக்கூற்றம்"

என்று கூறப்பட்டிருக்கிறது.

இந்நூலில், திருப்பெருந்துறையைப்பற்றிக்கூறியிருப்பது அத்தலம் "கானநாட்டைச் சேர்ந்தது என்பதை விளக்கும். "மாணிக்கவாசகர்திருவிளையாட்டம் பெருந்துறை கைலாசநாதர் குருதேசிகருடு" என்று அத்தலமிருந்த குறும்பர்நாட்டைக்கூறித் "திருமாணிக்கநல்லூர்"* என்பதையும் அதன்சம்பந்தமாக எடுத்தெழுதி, அதன் கீழ்

முத்தூர்க்கூற்றம் என்பது புறநானூற்று 24 ஆம் பாட்டிற் கூறப்பெற்ற முத்தூற்றுக்கூற்றமென் றெண்ணலாம். முத்தூற்றுக்கூற்றம் மிழலைநாட்டையடுத்திருந்ததாக அந்நூலிற்கூறியவிதம் இங்கும் மிழலைக்கூற்றத்தையடுத்து முத்தூர்க்கூற்றம் சொல்லப்பட்டிருக்கிறது. இக்கூற்றம் இராமநாதபுர சமஸ்தானத்தின் வடக்கில் ஒருபாகத்தைக் கொண்டிருந்ததென்றும், "உலகளந்தசோழநல்லூர்" என்ற பிரதிநாமத்தையுடைய கப்பலூர், அஞ்சுகோட்டை முதலிய ஊர்களைக் கொண்டிருந்ததென்றும் சென்னைக் கல்வெட்டு இலாகா 1909-ஆம் வருஷத்து 59-ஆம் கல்வெட்டினாலும் 1907-ஆம் வருஷத்து 408-ஆம் கல்வெட்டினாலும் அறிகிறோம். அடியார்க்குநல்லார் சிலப்பதிகாரம் காடுகாண்காதையுரையில்ஆதியிற் சோழநாட்டைச்சேர்ந்திருந்து பிறகு பாண்டியநாட்டின் பாகம ஆயிற்று என்றுகூறும் முத்தூர்க்கூற்றம் இப்பிரிவுதானென்று கொள்ளலாம். கானை|என்பது புறநானூற்று 21-ஆம்பாட்டிற்கூறப்பெற்ற கானப்பேராம். தேவாரத்தைப்பார்க்க. கானைக்கூற்றமென்பது புறநானூற்றுவிசேடக்குறிப்பின் 3-ஆம் பக்கத்திற்கூறியுள்ள திருக்கானப்பேர்க்கூற்றம். இது காளையார்கோவிலை உட்கொண்டபாகம். மிழலையும் கானையும் ஏதலங்களாகையால் திருமிழலைக்கூற்றமென்றும் திருக்கானைககூற்றமென்றுங் கூறப்பட்டன. இளையான்குடியென்பது இராமநாதபுரத்தைச்சேர்ந்த இளையான்குடிநாடாக இருக்கலாம். அரும்பூர்க்கூற்றம், கொடுமுளூர்க்கூற்றம், தொகுவூர்க்கூற்றம் ஆகிய கூற்றங்களுள் ஒன்று, கானநாட்டார்க்கும் கோனாட்டார்க்கும் நேர்ந்த சச்சரவுகளை விளக்கும் சாசனங்களில் அடிக்கடிகூறப்படும் அதரிக்கூற்றமாகவேண்டும்.

*திருப்பெருந்துறைப்புராணம் பெருந்துறை விசேடப்படலம்17-ஆம் பாட்டினின்றும், மூர்த்திநாமவிசேடமுரைத்தபடலம் 6-ஆம் பாட்டினின்றும் இவ்வூருக்குப் பவித்திரமாணிக்க(புர)ம் என் றொருபெயர் இருந்ததென்று நன்றாக விளங்குகிறது. இவ்வூரிலுள்ள ஸ்வாமி (திரிமூர்த்தி) தேசிகர், (ஜகத்)குரு என்ற நாமங்களைப்பெறவே "குறும்பர்நாடு" என்றது "குருதேசிகருடு"ஆயிற்று. "குறும்பர்நாடு" என்றபெயரால், ஆவுடையார்கோவில் இருக்குமிடமானது, ஆதியிற் குறும்பவேளாளர் என்ற ஒரு காராளர்வகுப்பினரைச்சேர்ந்ததென்று அறியலாம். ஒரு "எழுதரும்புகழான்" திருப்பெருந்துறைப்புராணத்திற்கூறிய விதம், "கங்கைசூழ்காசிநின்றும்" வரவழைக்கப்பட்டிருந்த அந்தணர்களுக்கு அந்நிலத்தின் ஒருபாகத்தை அளித்தான் என்றும், பிறகு குறும்பர்கள் தங்கள் நிலத்தை இவர்களிடத்திருந்து அடையமுயற்சிசெய்து பாண்டியன்முன் இந்நிலம்,

" ... ..மன்னவாமறையோரென்பார்

முன்றமதென்பாராயின்முயலுக்குக்கோடுண்டென்று" பெரு. படலம், 67.

வாதித்துப் "பன்னிரண்டுஆள்பரிசம்" வெட்டினாலும் நீர் ஊறாது என்று அவர்கள்நிலத்திற்கு அடையாளம் கூறினரென்றும், ஆவுடையார் பிராமணர் பக்கம் வழக்குரைத்து|வெட்டியவுடன்,

"தடையறவே நீரூற்றந் தங்காமல் வந்துவிடும்"

என்று சாதித்து,

